கடந்த மாதம் மணலியில் 44 — ஆம் நம்பர் பல்லவன் பஸ் கால்வாயில் விழுந்து இருபத்தேழு பேர் இறந்தார்கள் அல்லவா! அந்த பஸ்ஸை ஓட்டிய டிரைவர் பெயர் எம். சுப்பிரமணி. தலையில் உள் காயங்களுடனும், கையில் லேசான அடியுடனும் உயிர் தப்பிய அவர் ஸ்டான்லி ஆஸ்பத்திரியில் போலீஸ் காவலுடன் சிகிச்சை பெற்று வருகிறார். விபத்து பற்றிப் பேச ஆரம்பித்ததுமே கண்களில் நீர் அணை கட்டிக் கொண்டது சுப்பிரமணிக்கு.






• மணலியில் நடந்த பஸ் விபத்து...

''எனக்குச் சொந்த ஊர் திருத்தணி அருகில் உள்ள நெமிலி கிராமம். வயது முப்பத்தைந்து முடியப் போகிறது. ரொம்ப வருஷமாத் தினக்கூலியாகவும் லாரி டிரைவராகவும் வேலை செய்தேன். நான் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவன். முன்பு அ.தி.மு.க. ஆட்சியில் வேலை வாங்கித் தருவதாக ஒருவர் என்னை ஏமாற்றி இரண்டாயிரம் ரூபாய் பறித்து விட்டார். கவர்னர் ஆட்சியில்தான் எனக்கு இந்த வேலை கிடைத்தது. டிரைவர் பயிற்சிப் பள்ளியில் மூவாயிரம் கட்ட வேண்டியதாகி விட்டது. பயிற்சி முடிந்தவுடன் தண்டையார்ப்பேட்டை டிப்போவில் சேர்ந்தேன். ஜெ. சர்வீஸ் பஸ்களை ஓட்டி இருக்கிறேன். டூட்டிக்கு வந்து மூன்று சம்பளம்தான் வாங்கியிருக்கேன். நான் டெம்பரரியாக இருப்பதால், எந்த ரூட்டில் டிரைவர் இல்லையோ அந்த ரூட்டில் ஓட்டச் சொல்வார்கள்.''

''விபத்து நடந்த போது நீங்கள் குடித்திருந்ததாகவும், முறையற்ற வகையில் லாரியை ஓவர்டேக் செய்ததாகவும் சொல்கிறார்களே?''

''ஐயய்யோ... ஸார். எனக்கும் ஏழு குழந்தைகள் இருக்கு. அதுங்க சாட்சியாச் சொல்றேன். அப்படியெல்லாம் ஏதும் கிடையாது. அந்த பஸ்ஸை முதல் நாள் மதியம் எடுத்தேன். மணலியில் பஸ்ஸுக்கு நைட் ஹால்ட். பஸ்ஸை எடுக்கும் போதே பிரேக்

# ''நானும் இந்த விபத்தில் இறந்திருக்கக் கூடாதா?''

ஆயில் ஒழுகியது. நான், 'பஸ்ஸைச் சரி பண்ணிக் கொடுங்க' என்று டைம் கீப்பரிடம் கேட்டேன். மெக்கானிக் தாற்காலிகமாக ஏதோ சரி பண்ணி வைத்தார். அரை மனத்தோடுதான் வண்டியை எடுத்தேன். மறுநாள் பகல் பதினோரு மணிக்கு மண்லியிலிருந்து சென்னைக்கு வரும் டிரிப். வரும்போது வளைவான பாதை ஒன்று வரும். அதன் முடிவில் பாலம் ஒன்றிருக்கிறது. வளைவில் வந்து பிரேக்கை அழுத்தி, வேகத்தைக் குறைத்து, பஸ்ஸைப் பாலத்தின் மீது திருப்ப நினைத்த போது... பஸ்ஸின் வேகம் குறையவில்லை. என்னால் பஸ்ஸைக் கண்ட்ரோலுக்குக் கொண்டு வர முடியவில்லை. வினாடிகளில் பஸ் கால்வாயில் விழுந்து விட்டது.

''கஷ்டப்பட்டு ஜன்னல் வழியாக வெளியே வந்தேன். எனக்கு அடிபட்டதையும் மறந்து நான்கைந்து பேரைக் காப்பாற்றினேன். மரணம் அடைந்த நான்கு பேரை வெளியே எடுத்தேன். இதற்குள் ஒருவர் 'யார்டா டிரைவர்? என் பொண்ணு பிழைக்கலேன்னா, உன்னைக்குளோஸ் பண்ணிடுவேன்'னு சத்தம் போட்டுக் கொண்டிருந்தார். அப்போது நான் பயந்து நடுங்கி விட்டேன். நல்ல வேளையாக என் உடம்பெல்லாம் சேறும் சகதியுமாக இருந்ததால் யாராலும் என்னை அடையாளம் கண்டு பிடிக்க முடியவில்லை. பிறகு ஒருவழியாகக் காயம் பட்டவர்களை ஏற்றிச் சென்ற ஜீப்பில் ஏறித் திருவொற்றியூர் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று விஷயத்தைச் சொன்னேன்.

''விபத்து நடந்த தினத்துக்குச் சரியாக ஒரு மாதம் முன்புதான் திருப்பதி சென்றேன். வேண்டுதலுக்காக மொட்டை போட்டுக் கொண்டேன். மனைவியின் தாலி உட்பட என் முதல் மாதச் சம்பளத்தை அப்படியே உண்டியில் போட்டேன் (கன்னத்தின் மீது கண்ணீர் வழிந்தோடுகிறது). இந்த மாதம் சம்பளம் வாங்கி வேளாங்கண்ணி செல்லலாம் என்றிருந்தேன்.

''நான் 240 டூட்டி செய்தால்தான் வேலையில் நிரந்தரமாக்குவார்கள். அதுவரை எந்தெந்த ரூட்டில் டிரைவர் இல்லையோ அங்கே போடுவார்கள். அதனால் சில நாட்கள் எனக்கு டூட்டி கிடைக்காமல் கூடப் போகும். டூட்டி செஞ்ச நாட்களுக்குத்தான் சம்பளம். அதனால்தான் கூடிய வரையில் டூட்டியை விட்டு விடுவதில்லை'' என்று சொல்லும் சுப்பிரமணியின் பெரிய பையனும் (வயது 17) மனைவியும், கட்டட வேலை — கூலி வேலை செய்து வருகிறார்களாம். மற்ற ஆறு குழந்தைகளும் கார்ப்பரேஷன் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிறார்களாம். ஐம்பது ரூபாய் வாடகையில் ஒரு குடிசை வீட்டில் மூலக்கடை அருகில் குடி இருக்கிறார் சுப்பிரமணி.

ஆஸ்பத்திரிக்கு வருபவர்கள் இவரது கட்டிலுக்கு அருகில் வந்ததும், ''இவன் தானா... அந்த டிரைவர்? இவன் சாகலியே... பொழைச்சுண்டுட்டானே!'' என்று இவர் காதுபட முணுமுணுத்துக் கொண்டு போகிறார்களாம். ''இந்த மாதிரியான சொற்களைக் கேட்பதற்குப் பதில் நானும் அந்த விபத்தில் இறந்திருக்கலாம் ஸார்...'' என்று துக்கத்தில் முகத்தைக் கவிழ்த்துக் கொள்கிறார் சுப்பிரமணி.

சந்திப்பு: **நமது நிருபர்**

படங்கள் — நன்றி: '**தினமலர்**'



# வீணாக்கி விட்டீர்களே, ஓடுங்கள்! ஓடுங்கள்!

கல்வி பரப்புவதையே தம் வாழ்வின் வேலையாகக் கொண்டு பிரச்சாரம் செய்து வந்தவர் பிரான்சிஸ் பார்க்கர். ஒரு பெண்மணி அவரை அணுகி, ''ஐந்து வயதாகும் என் குழந்தைக்கு எப்பொழுது, நான் கல்வி கற்பிக்கத் தொடங்கலாம்?'' என்று கேட்டாள்.

உடனே, பிரான்சிஸ் பார்க்கர், ''அட, கடவுளே! என்னுடன் பேசிக் கொண்டு இங்கு நிற்காதீர்கள்! ஓடுங்கள் வீட்டுக்கு! ஏற்கெனவே ஐந்தாண்டுகளை வீணாக்கி விட்டீர்களே!'' என்று விரட்டினார்!

நன்றி: ''படியுங்கள் சுவையுங்கள்''

தகவல்: ஏ. ஜெகதாம்பாள்.

# கூடுதல் சம்பளத்தை என்ன செய்யப் போகிறீர்கள்?

**தமிழக அரசு அறிவித்துள்ள புதிய சம்பள விகிதப்படி, "அதிகப்படியாய்க் கிடைக்கப் போகும் வருமானத்தை எப்படிச் செலவு செய்யப் போகிறீர்கள்?" என்று சில மாநில அரசு ஊழியர்களைக் கேட்டோம்...**



**சியாமளா:** "எனக்குப் புதிய சம்பள விகிதப்படி, இருநூறிலிருந்து முந்நூறு ரூபாய் வரை கிடைக்கலாம். எனக்குச் சொந்தமாய் ஒரு வீடு கட்ட வேண்டுமென்று ஆசை. அதற்கு வாங்கும் கடனைத் திருப்பிச் செலுத்துவதை இந்த அதிகப்படிச் சம்பளம் ஓரளவுக்கு எளிதாக்கும்!" என்கிறார் இருபத்தைந்து வருட சர்வீஸ் கொண்ட இந்த குடும்ப நலத்துறை ஊழியர்.



**விஜயகுமார்:** நீதித் துறையில் பணிபுரியும் இவர், "இந்தச் சம்பள உயர்வையொட்டி, பணவீக்கமும் விலைவாசி உயர்வும் இருக்கும். பஸ் கட்டணம் உயரப் போகிறது. பெட்ரோல் விலையையும் அதிகரித்து விட்டார்கள். எப்படியும் அடுத்த ரயில்வே பட்ஜெட்டில் பயணிகள் மற்றும் சரக்கு, ரயில் கட்டண உயர்வுகள் இருக்கும். இவை மேலும் விலைவாசி உயர்வுக்கு வழி வகுக்கும். ஆக, வரவுக்கும், செலவுக்கும் சரியாய்ப் போய் விடும். இந்த நிலையில் அதிகப்படி வருமானம் என்று இதை எப்படிச் சொல்வது?" என்கிறார்.



**ஹேமலதா:** "எனக்கு இந்தச் சம்பள உயர்வினால் அதிக பிரயோஜனமில்லை சார்! ஒவ்வொருவருக்கும் மாதம் ரூ 250 முதல் ரூ 1000 வரை உயர்வு இருக்கும் என்றார்கள். பெரும் எதிர்பார்ப்புகளுடன் இருந்தோம். கடைசியில் புஸ்வாணம்தான்! வருடத்துக்கு இருநூறு போலத்தான் அதிகரித்துள்ளது, என் போன்றவர்களுக்கு (ஸ்டெனோ... சர்வீஸ் பதினைந்து வருடம்). ஏமாற்றம்தான்! நீங்கள் வேறு இப்படிக் கேட்டு ஏன் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறீர்கள்?"



**பாலசுப்ரமணியன்:** "முதலில் நானூறு ரூபாய் உயர்வு இருக்கும் என்றார்கள். கடைசியில் பார்த்தால் எங்களுக்கு முந்நூறுதான் உயர்வு. நூற்றைம்பது ரூபாயைச் சேமிக்கத் திட்டமிட்டுள்ளேன். மீதி விலைவாசி உயர்வுகளுக்கு அட்ஜெஸ்ட் ஆகி விடும்." என்றார் இந்த பொதுப்பணித் துறை இஞ்சினீயர்.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி.** படங்கள்: **சோமு**

# பாலும் பாவையும்

(விந்தன் நாவல் அல்ல; விந்தையான உண்மைக் கதை)

**டாக்டர் என். கார்த்திகேயன் சொல்கிறார்:**

**நா**ன் அப்போதுதான் சைதாப்பேட்டையில் கிளினிக் துவங்கியிருந்தேன். என்னிடம் சிகிச்சைக்கு வருகிறவர்களை வெறும் நோயாளிகளாக மட்டும் நான் பார்ப்பதில்லை. எனக்கு ஒரு புது நண்பர் கிடைத்த உணர்வோடு பழகுவேன். அது அவர்கள் மனச்சுமையை இறக்கி வைத்து, அதனாலேயே அவர்களது நோய் ஓரளவு குணம் பெறக் கூடும் என்பது ஒரு டாக்டர் என்ற முறையில் எனக்குக் கிடைத்த அனுபவம்.

அன்று என்னிடம் சிகிச்சைக்காக வந்தவர்களில் குறிப்பிடத்தக்கவள் அந்தப் பெண். கூச்ச சுபாவமும் குடும்பப் பாங்கும் நிறைந்தவள். முகத்தில் வேதனையைக் காட்டிலும் ஏராளமான சோகம் கப்பியிருப்பதைக் காண முடிந்தது. வயது சுமார் இருபத்தைந்து இருக்கலாம். முகம் வெளிறிப் போயிருந்தது. என்ன கேஸ் என்று கணிக்க முடிந்தது.

''உடம்புக்கு என்னம்மா?'' என்றேன்.

அவள் பேசவில்லை. அடியுதட்டை மடக்கிக் கடித்துக் கொண்டாள். கண்களில் குபுக்கென்று கண்ணீர் திரையிட்டது.

''சொல்லேண்டி!'' பின்னாலிருந்து ஓர் அதட்டல்.

நிமிர்ந்து பார்த்தேன். அந்தப் பெண்ணுடன் வந்திருந்தவளை அப்போதுதான் கவனித்தேன். அரை நரையோடிய தலை. அந்த முகத்திலிருந்த அசூயையையும் நிஷ்டூரத்தையும் கண்டதும்...நிச்சயம் அந்தப் பெண்ணின் மாமியார்தான் அவள் என்று புரிந்தது.

மனசுக்குள் துணுக்கென்று அவள் மீது எழுந்த சீற்றத்தை அடக்கிக் கொண்டேன். ''அபார்ஷன்தானே?'' என்று அவளிடம் அமைதியாகக் கேட்டேன்.

மாமியார் முகத்தில் மெள்ள மெள்ள ஒரு நம்பிக்கை ஒளி பரவியது. என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அழாத குறையாக முறையிட்டாள். ''டாக்டரய்யா, நான் என்னன்னு சொல்லட்டும். இவ எனக்கு ஒரு பேரனையோ பேத்தியையோ பெத்துக் குடுப்பா, அதை நான் மடியிலே போட்டுட்டுத் தாலாட்டுவேன்கிற நம்பிக்கையே அத்துப் போச்சு சாமி...'' என்று ஒப்பாரி வைத்து மூக்கைச் சிந்திப் போட்டாள் அவள்.

''ஏம்மா... ஏன் இதைப் போய் இத்தனை பெரிசுபடுத்தறீங்க? இது ரொம்பச் சாதாரண விஷயம். இப்ப போனா என்ன? அடுத்த வாட்டி தங்கிடும்... கவலைப்படாதீங்க.'' நான் டெஸ்ட்டுக்குத் தயாரானேன். ''நீங்க கொஞ்சம் வெளியே இருங்க.''

''ஹூம்... ஒவ்வொரு வாட்டியும் அப்படி நம்பிக்கிட்டுத்தான் போறேன். அந்த மகமாயி கண்ணைத் திறக்க மாட்டேங்கறாளே!'' மாமியார்க்காரி முணுமுணுத்துக் கொண்டே வெளியேறினாள்.

'ஒவ்வொரு வாட்டியும்...' இது எனக்கு வித்தியாசமாய்ப் பட்டது. இதற்கு என்ன அர்த்தம்?

அந்தப் பெண் வாயிலாக ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமா? அது வாய் திறந்து பேசுமா? ''உன் பேர் என்னம்மா?''

''ஜானகி!'' தலைகுனிந்தபடி சொன்னது.

''உங்க மாமியாருக்கு உன் மேலே ரொம்பக் கோவம் போலிருக்கு...'' நிலைமையைச் சகஜப்படுத்த முயன்றேன்.

''இருக்காதா பின்னே?''

''ஏன் அப்படிச் சொல்றே? அப்படி நீ என்ன பெரிய தப்புச் செய்துட்டே?''

அவள் பொருமி வெடித்தாள். ''ஒண்ணா ரெண்டா? இது நாலாவது டாக்டர். ரெண்டு மாசம் மூணு மாசம். அதுக்கு மேலே தாங்கறதில்லே. கலைஞ்சி போவுது... புள்ளை பெற வக்கில்லாத மலடின்னு பேரெடுத்தாலும் பரவாயில்ல டாக்டர். நான் குறை குறையாய்ப் பெத்து வழிச்சுப் போட்டிருக்கேனே... நான் என்ன பாவம் செய்தேன் டாக்டர்?'' என்று கேட்டுவிட்டுத் தலைத் தலையாய் அடித்துக் கொண்டாள்.

அவளை எப்படித் தடுத்து நிறுத்துவது என்று தெரியாமல் சற்றுத் திணறினேன். ''இதோ பாரம்மா, உடம்புக்கு வர்றதெல்லாம் பண்ண பாவத்தாலன்னு ஆயிட்டா, அப்புறம் எங்களைப் போல டாக்டர்களுக்கு என்ன வேலை? உனக்கு இனிமே அபார்ஷன் ஏற்படாமச் செய்யணும். அதுக்கு நான் மருந்து கொடுக்கிறேன். முயற்சி

பண்ணிப் பார்ப்போமே!''

சற்றே நம்பிக்கையோடு அவள் என்னை நிமிர்ந்து பார்த்தாள். அந்தக் கபடு சூதில்லாத வேதனை முகத்தைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தது. மருத்துவத்துறையில் குறுகிய கால அனுபவமே உள்ள எனக்கு, அந்தக் கேஸ் அப்போதைக்கு ஒரு புதிராகவே இருந்தது. இயன்ற அளவுக்கு முயன்றுதான் பார்ப்போமே என்ற தைரியத்தில் சிகிச்சையைத் துவங்கினேன்.

ஒரு வாரம் போல் தினமும் வந்து மருந்து வாங்கிக் கொண்டு போனாள் ஜானகி. பூரண குணம் பெற்றாள். நிறையப் பால் சாப்பிடும்படி பரிந்துரைத்து அனுப்பினேன்.

இரண்டு மூன்று மாதங்கள் சென்றன.

என்னைப் பார்க்க வந்தாள். இடிந்து பொடிப் பொடியாய்ப் போனது போல் தோற்றம். பிரயோஜனமில்லை. அபார்ஷன்!

இந்த முறை நான் கணவன் மனைவி இருவரையும் ஒரு டி.ஜி.ஓ.விடம் டெஸ்ட் பண்ணிக் கொண்டு வரும்படி அனுப்பினேன். வந்த ரிப்போர்ட்டை வைத்துப் பார்த்த போது இருவரும் 'பர்ஃபக்ட்லி ஆல்ரைட்' என்று சொல்லும்படிதான் இருந்தது.

ஜானகிக்கு ஊட்டச் சத்து நிறைந்த டானிக் வகைகளை எழுதிக் கொடுத்து, ''இதைச் சாப்பிட்டு வா. நாளாவட்டத்தில் சரியாய்ப் போய்விடும். உங்கள் இரண்டு பேர் உடம்பிலும் எந்தக் குறையும் இல்லையே!'' என்று சொல்லியனுப்பினேன்.

என் நம்பிக்கையில் இடி விழுந்தது.

மறுபடியும் வந்து விட்டாள் ஜானகி. இந்த முறை அவள் வழக்கத்துக்கு அதிகமாக அழுது தீர்த்து விட்டாள். ''டாக்டர், மாமியார் பேசுவதைத் தாங்க முடியவில்லை. தெய்வ குத்தம்னு சொல்லி வீட்டிலே மந்திரவாதிங்களையெல்லாம் வரவழைச்சுப் பூசை போட்டார்கள். மருந்துக்கும் தக்கலை; மந்திரத்துக்கும் தக்கலை. டாக்டர், எனக்கு ஏதாவது விஷம் கொடுங்களேன்,'' என்று பித்துப் பிடித்தவள் போல் பிதற்றினாள்.

ஒருவழியாய் அவளுக்குத் தேறுதல் சொல்லி, அப்போதைய நிலைக்கு மருந்து



கொடுத்து அனுப்பி வைப்பதற்குள் எனக்குப் போதும் போதுமென்றாகி விட்டது.

அடுத்தாற்போல் வந்த நோயாளியைக் கவனிக்க ஆரம்பித்தேன். என்னுடைய வழக்கமான வாடிக்கையாளர்தான் அவர். பால்காரர் முனுசாமி.

''என்ன முனுசாமி, காயலாவா?''

''ஆமாம் சார். ஊசி போட்டுவுட்டுடு சார்,'' என்று முண்டாவைக் காட்டினான்.

ஊசி போடுகிற டாக்டர்தான் உயர்ந்த டாக்டர் என்ற நம்பிக்கை சிலரிடம் உண்டு. முனுசாமி அந்த ரகம். நானும் அவன் நம்பிக்கைக்குப் பழுதில்லாமல் நடந்து கொள்கிறேன்.

சிகிச்சை முடிந்ததும் தட்சிணை கொடுப்பதற்காக மடியைத் தடவினான் அவன். அப்போதுதான் மடியிலிருந்து தரையில் விழுந்த அந்தப் பொருளைக் கவனித்தேன். நல்லவேளை, உடையவில்லை. அது சிரிஞ்சி! டாக்டர்கள் பயன்படுத்தும் சிரிஞ்ச். என் காலடியில் கிடந்ததால் அவனை முந்திக் கொண்டு நான் எடுத்து விட்டேன்.

''என்ன முனுசாமி, இது ஏது உனக்கு?'' என்றேன்.

''என்னுதுதான் சார்'' தலையைச் சொறிந்து கொண்டான்.

''இதை எதுக்கய்யா வச்சிட்டிருக்கே?''

''ஊசி போடறதுக்குத்தான் சார்.''

''ஊசி போடறையா? யாருக்கு?''

''மாட்டுக்கு.''

''மாட்டுக்கா? எதுக்கு?''

''அது வந்து... பால் உப்புரி காணும். நிறையப் பால் கறக்கும். அதுக்காகத்தான்.''

''அதென்னப்பா மருந்து?''

''பேரு வாயில நுழையல சார். மருந்துக் கடையிலே கேட்டாக் கொடுப்பாங்க... வாடிக்கையா வாங்கறேன் இல்லே?''

''அந்த மருந்து சீசா... இல்லே, பில் எதுனா இருக்கா?''

சட்டைப் பையிலே வைத்திருந்த அந்த ஊசி மருந்து சீசாவை எடுத்து நீட்டினான்.

ஆக்ஸிடாசின்!

அதைப் பார்த்ததும் எனக்குப் பொறி தட்டியது. அப்படியும் இருக்கலாமோ? விசாரித்தேன்.

''எங்கே குடியிருக்கே?''

''இப்ப போனாங்களே, ஜானகி அம்மா அவங்க வீட்டுக்குப் பின்னாடிதான்.''

''அவங்க வீட்டுக்குப் பால் ஊத்தறது நீதானா?''

''ஆமாங்க, ஏன்?''

''இல்லே... எவ்வளவு நாளா ஊத்தறே?''

''ஏன்... அந்தம்மா கண்ணாலம் முடிச்ச கையோட எங்க ஊட்டுக்குப் பின்னாடிதான் குடி வந்தாங்க. அண்ணிலேர்ந்தே நம்மளை விட்டா வேறே யார் கையிலேயும் பால் வாங்க மாட்டாங்க. பாக்கெட் பால் பக்கம் கூடத் திரும்ப மாட்டாங்க.''

கரெக்ட். என் ஊகம் பொய்க்கவில்லை.

அடுத்த நாள் ஜானகி சிகிச்சைக்காக வந்த போது நான் கேட்ட முதல் கேள்வி இதுதான்.

''நீங்க வழக்கமா யார்கிட்ட பால் வாங்குவீங்க?''

''எங்க வீட்டுக்குப் பின்னாடி முனுசாமின்னு ஒரு பால்காரர் இருக்கார் டாக்டர். எங்களுக்கு மட்டும் கறந்த பாலை அப்படியே கொண்டு வந்து தருவார். ஏன் டாக்டர்?''

''சரி. இனிமே எந்தக் காரணத்தைக்



# ஐடிபிஐ-முதலீட்டுப் பத்திரங்கள் முதலீட்டு ஆதாய வரி விலக்குப் பெற ஒரு கவர்ந்திடும் வழி



- ஆண்டு முழுவதும் சமநிலையில் கிடைக்கும்.
- வருமான வரிச் சட்டம், 1961, பிரிவு எண் 54E-ன் கீழ் முதலீட்டு ஆதாய வரி விலக்கு.
- செல்வ வரிச் சட்டம், 1957, பிரிவு எண் 5(1)xvie)-ன் கீழ் செல்வ வரி விலக்கு.
- வருமான வரிச் சட்டம், பிரிவு எண் 80-Lன் கீழ் வருமான வரி குறைப்பு.
- ஆண்டொன்றுக்கு 9% விகிதத்தில் ஆறு மாதத்திற்கொரு முறை வட்டி வழங்கப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால் 3 ஆண்டுகட்கான மொத்த வட்டியும் தள்ளுபடி முறையில் முன்னதாகவே ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்பொழுது கழிக்கப்படமாட்டாது.
- வெளியூர்க் காசோலைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும்.

Sobhagya-8/89 TAM



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபிஸை அணுகுங்கள் அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்:

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், கொலபா, பம்பாய் 400 005

வாங்கி விட்டீர்களா?



# குங்குமம்

14.7.'89 இதழில் ஆரம்பம்



## ரஜினிகாந்த் அனுபவங்கள்

புதுமைகள்
நிறைந்த தொடர்.

## சுஜாதா பதில்கள்

கேள்வி பதில்கள்....
சூடும், சுவையும்
கலந்த பதில்கள்.



## பட்டுக்கோட்டை பிரபாகர்



## காதல் ஒத்திகை

கிளுகிளுப்பான
தொடர்கதை

கொண்டும் அந்த ஆள்கிட்ட பால் வாங்காதீங்க. பாக்கெட் பால் வாங்கிக்குங்க.''

அவள் முகத்தில் குழப்பம். ''டாக்டர்... எனக்கு அந்தப் பாக்கெட் பால் வாசம் பிடிக்கறதில்லை...''

''நீ பாலே சாப்பிடாட்டாலும் பரவாயில்லை. அந்த முனுசாமி கொடுக்கிற பாலை மட்டும் குடிக்காதே! குடிச்சே... நீ ஆயுசுக்கும் முழுக் குழந்தைக்குத் தாயாக முடியாது.''

''குடிக்கவேன்னா குழந்தை முழுசா நிற்குமா டாக்டர்?''

''சத்தியமா நிற்கும். நான் அதுக்கு உத்தரவாதம்.''

''எப்படி டாக்டர் சொல்றீங்க?''

''நான் சொல்றேன், நம்பு'' என்று மட்டும்தான் அந்தப் பெண்ணிடம் சொல்ல முடிந்தது என்னால்.

ஆனால் ஒரு சமுதாயப் பிரக்ஞை உணர்வோடு உங்களிடம் என்னால் காரணத்தை விளக்க முடியும்.

ஆக்சிடாசின் இஞ்செக்ஷன் போட்டு, அபரிமிதமாகப் பால் கறக்கும் ஆசையில் பட்டணத்துப் பால்காரர்கள் பலர் இந்தக் கொடுமையைச் செய்து வருகிறார்கள். இந்த ஆக்சிடாசின் என்ற மருந்தின் குணம் கருப்பையைச் சுருங்க வைப்பது. இதைப் பிரசவ நெருக்கடியில் அரிதாக உபயோகிப்பார்கள்.

இந்த மருந்து கறவை மாட்டுக்குப் புகுத்தினால் இருக்கிற பாலைப் பிழிந்து வெளியேற்றும். அது அந்த வாயில்லா ஜீவனைக் குரூரமாய்க் கொடுமைப்படுத்துவதாகும். இந்தக் கொடூரத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று அரசு எத்தனையோ நடவடிக்கைகள் மேற்கொண்டிருக்கிறது. அதையும் மீறி இன்னும் சில இடங்களில் இந்த ஆக்சிடாசின் நடமாடிக் கொண்டிருக்கிறது. இதனால் மாடு இளைத்து ஆயுள் குறைந்து அநியாயமாய் அகால மரணமடையும்.

இந்த உண்மைகளையெல்லாம் பால்கார முனுசாமியிடம் அந்தரங்க சுத்தியோடு நான் எடுத்துச் சொன்னதன் விளைவு: அப்போதே அவன் மடியிலிருந்த சிரிஞ்சை எடுத்துத் தலையைச் சுற்றி வீசியெறிந்தான். ''சத்தியமாய் இனிமே என் மாட்டுக்கு ஊசி போட மாட்டேன் சார். அதைப் பார்த்தா நான் எத்தனை பாவம் செய்தேன்னு மனசு உறுத்திட்டே இருக்கும். அதனால அதை வித்துட்டு வேற மாடு வாங்கப் போறேன்.'' என்று வெளியேறினான்.

அது சரி, அந்தப் பாலில் கலந்து வந்த ஆக்ஸிடாசின் பாதிப்புத்தான் ஜானகியின் கருப்பையைச் சுருக்கிக் குறைப் பிரசவங்களாய்ப் பிதுங்கின என்ற என் ஊகம் சரிதானா?

நூற்றுக்கு நூறு சரிதான். அடுத்த ஆண்டு ஜானகி ஓர் அழகிய ஆண் குழந்தைக்குத் தாயாகி, அவள் மாமியார் மடியில் போட்டு அவரது மானாவாரியான பாராட்டைப் பெற்றாள்!

**(பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன. டாக்டரிடம் கேட்டு எழுதியவர்: எஸ். ராஷ்மி.)**



''இன்று யாருமே உங்களுக்கு லஞ்சம் கொடுக்கலைங்கறதுக்காக உங்க மானேஜராகிய என்னிடமே நீங்க லஞ்சம் கேட்கறது கொஞ்சம் கூட நன்றாக இல்லை!''

— லலிதா செல்லப்பா.

''மெடிகல் காலேஜிலே சேருகிறதா, இல்லே, எஞ்சினியரிங் காலேஜிலே சேருகிறதான்னு சஞ்சலப்பட்டுக்கிட்டே இருந்து... கடைசியிலே... லேடீஸ் காலேஜிலேயே சேர்ந்துட்டேன்... — அட்டெண்டரா...!''

— பெ. கலாசாமி.



எழுத்தாளர்: வழக்கத்துக்கு மாறா என் கதையைப் பாராட்டிப் பல வாசகர்கள் கடிதம் எழுதியிருக்கிறதாச் சொல்றீங்களே, ஆச்சரியமா இருக்கு!

பத்திரிகை ஆசிரியர்: அந்தக் கடிதங்களில், உங்க கதைகளில் இடம்பெறும் சந்திப் பிழை, எழுத்துப் பிழை எல்லாம் அப்படி அப்படியே இடம் பெற்றிருப்பது எனக்கும் ஆச்சரியமாத்தான் இருக்கு!

— கரம்.



பஞ்சாயத்து ராஜ்யம்
முதல்வர்கள் மாநாடு

மைய அரசு அமலாக்கம்

வாசலைப் பெரிசாக்குங்க! தலை குனிஞ்சு மண்டியிட்டு வர முடியாது!

வர முடியாது போய்யா!








# கல்கி

1989 ஜூலை 16
மலர் 47 இதழ் 50
சுக்ல ஆடி 1




# இருபத்தி எட்டாவது மந்திரிசபை!

இருபத்தி ஏழாவது தடவையாக மந்திரி சபையில் மாற்றம் செய்திருக்கிறார் ராஜீவ் காந்தி. இப்போது வெளியாகியிருப்பது இருபத்தெட்டாவது பட்டியல்! ஒரு தேர்தல் முடிந்து பதவிக்கு வந்து, அடுத்த தேர்தலுக்குள் மிக அதிகமான அளவில் மந்திரி சபை மாற்றம் செய்தவர் என்ற முறையில் நிச்சயம் ராஜீவ் கின்னஸ் புத்தகத்தில் இடம் பிடிப்பார். தப்பித் தவறி இதில் யாருக்காவது ஏதாவது சந்தேகம் இருக்குமானால், அவர்கள், அடுத்த தேர்தல் வர இன்னும் சில மாதங்கள் அவகாசம் உள்ளது என்பதையும், ''மேலும், மாற்றங்கள் தேவைப்படுமா என்பதைப் பார்க்க வேண்டும்'' என்று ராஜீவ் கூறியிருப்பதையும் எண்ணிப் பார்த்து நிம்மதி பெறலாம்!

இருபத்தியேழாவது மந்திரி சபை மாற்றத்தை அறிவித்த தினமணி பத்திரிகை, மேலும் சில சுவாரஸ்யமான புள்ளி விவரங்களையும் தருகிறது:

| | | |
|---|---|---|
| 1. | மத்திய மந்திரி சபையில் மாற்றம் | 27 |
| 2. | மத்திய மந்திரி சபையில் சேர்க்கப்பட்ட மற்றும் நீக்கப்பட்ட மந்திரிகள் | 95 |
| 3. | கடந்த நாலரை ஆண்டுகளாக ஒரே இலாக்காவில் இருக்கும் அமைச்சர்கள். | 2 |
| 4. | மாற்றப்பட்ட மாநில முதல்வர்கள் | 19 |
| 5. | முதல்வர் பதவியிலிருந்து நீக்கப்பட்டு மத்திய மந்திரி சபையில் சேர்க்கப்பட்டவர்கள்... | 8 |
| 6. | மத்திய மந்திரி பதவியிலிருந்து நீக்கப்பட்டு முதல்வராக்கப்பட்டவர்கள்... | 10 |
| 7. | பதவிக்காலம் முடியும் முன்னதாக மாற்றப்பட்ட ஆளுனர்கள் | 14 |
| 8. | பதவியிலிருந்து நீக்கப்பட்ட அ. இ. கா. க. பொதுச் செயலாளர்கள் | 19 |
| 9. | மாற்றப்பட்ட பிரதேச காங்கிரஸ் கமிட்டி தலைவர்கள்... | 43 |

இந்தப் புள்ளி விவரங்கள் உணர்த்துவது என்ன?

1. நமது பிரதமருக்கு ஒரு திடமான உள்ளமும், உறுதியான செயல்பாடும் இல்லை.

2. நல்லவர்களை, திறமையானவர்களைத் தேர்ந்தெடுத்து, அமைச்சர்களாக நியமித்து, அவர்களைச் சுதந்திரமாக இயங்க அனுமதிக்கும் மனப்பான்மை அவருக்கு இல்லை. எந்த ஓர் அமைச்சருக்கும் நற்பணியாற்றத் தேவைப்படும் குறைந்தபட்ச அவகாசத்தை அளிக்கும் பெருந்தன்மைகூட அவருக்கு இல்லை.

3. காங்கிரஸ் கட்சிக்குள் ஜனநாயகம் இல்லை. அதனால் உட்பூசல் அதிகரிக்க, மாநில முதல்வரை மத்திய அமைச்சராகவும், மத்திய மந்திரியை மாநில முதல்வராகவும் பந்தாட வேண்டிய நிர்ப்பந்தம் ராஜீவுக்கு ஏற்படுகிறது.

4. காங்கிரஸ் நாளுக்கு நாள் எல்லா மாநிலங்களிலும் பலவீனப்பட்டு வருகிறது. பிரதேச காங்கிரஸ் கமிட்டி தலைவர்களையும் அ. இ. கா. க. கமிட்டி பொதுச் செயலாளர்களையும் அடிக்கடி மாற்றிக் கொண்டிருந்தால் ஏதோ ஓர் அற்புதம் நிகழ்ந்து அவர்கள் எப்படியோ நிலைமையை அபிவிருத்தி செய்து விடுவார்கள் என்று நம்புகிறார்.

5. ஆளுனர்கள் சுதந்திரமாகத் தங்கள் மனச்சாட்சிப்படி இயங்க அனுமதிக்க ராஜீவுக்கு மனமில்லை. மத்திய அரசின் ஏஜெண்டாக அவர்கள் இயங்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்.

6. சுருக்கமாகக் கூறுவது எனில், எதேச்சாதிகாரப் போக்குடன் கூடிய துக்ளக் ஆட்சியை நாம் அடைந்திருப்பதாகச் சொல்லலாம்.

'எல்லாம் சரி, ஆனால் இவரை விட்டால் ஆட்சிக்கு வரக்கூடிய தேசிய முன்னணி என்ற நெல்லிக்காய் மூட்டை என்னத்தை உருப்படியாகச் சாதித்துவிடப் போகிறது?' என்று நேற்று வரை கேட்டு வந்தவர்கள் கூட இனி, 'எந்த ஆட்சியும் இந்த ஆட்சியை விடத் தேவலாம்' என்று கருத வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டு வருகிறார்கள்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# கும்பிட வேண்டிய சிலைகளைக் கொள்ளையடிக்கிறார்கள்...



* திருடர்களிடமிருந்து கைப்பற்றப்பட்ட சிலைகள்...

**இளைய பெருமாள் கோவில் என்றழைக்கப்படும் இந்த கோயிலில், நேற்றிரவு கொள்ளையர்கள் புகுந்து, காவலாளியைக் கொன்று உற்சவ மூர்த்திகளான திருமங்கையாழ்வார், ஸ்ரீதேவி சிலைகளையும், உண்டியல் பணத்தையும் அபகரித்துச் சென்றனர். குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கத் தீவிர முயற்சி மேற்கொள்ளப்பட்டது.**

திருச்செங்கோடு அருகே விட்டம்பாளையம் கிராமத்தில் நடந்த இந்தத் திருட்டுப் பற்றிய செய்தி, டெலிபிரிண்டர் வரிகளாய்ச் சென்னையில் உள்ள குற்றப் பிரிவு போலீஸ் கண்காணிப்பாளர் பஞ்சாபகேசன் கையில் ஜூலை 4வ அன்று படபடத்துக் கொண்டிருந்தது. முகத்தில் ஆழ்ந்த யோசனை செய்வதற்கான அறிகுறிக்கிடையிலும் ஜோக்கடிக்கிறார் பஞ்சாபகேசன்:

''பார்த்தீர்களா... திருமங்கையாழ்வார் அன்னதானம் செய்வதற்காகக் கொள்ளைக்காரராக இருந்து மனம் மாறி பக்தி மார்க்கத்தில் சென்றதாக வரலாறு கூறுகிறது. இங்கே என்னடா என்றால் திருமங்கையாழ்வாரையே கொள்ளையடித்து விட்டார்கள்!''

அடுத்த ஒரு மணி நேரத்தில் கொடுக்க வேண்டிய ஆலோசனைகளையெல்லாம் தமக்குக் கீழ் பணியாற்றுவோருக்குக் கொடுத்து விட்டு நம் கேள்விகளைச் சந்திக்கத் தயாரானார் பஞ்சாபகேசன்.

''ஒரு கோயிலில் சிலை திருடு போனால் உடனடியாக என்ன செய்ய வேண்டும்?''

''உள்ளூர் போலீஸ்தான் முதலில் வழக்கைப் பதிவு செய்து விசாரிக்கும். திருடு போன சிலைகளின் படங்களும், சிலைகளைப் பற்றிய விவரங்களும் தொல் பொருள் அதிகாரிகள், சி.பி.ஐ. அதிகாரிகள், கஸ்டம்ஸ் அதிகாரிகள் ஆகியோருக்கு அளிக்கப்படும். உள்ளூர் போலீஸினால் குறிப்பிட்ட காலத்துக்குள் திருடர்களைக் கண்டுபிடிக்க முடியாவிட்டால் வழக்கு மாநில குற்றப் பிரிவுக்கு மாற்றப்படும். சிலைத் திருட்டைக் கண்டுபிடிப்பதற்காகவே தமிழ்நாடு போலீஸில், தனி அமைப்பு இருக்கிறது. எத்தனை ஆண்டுகள் ஆனாலும் திருடப்பட்ட சிலைகள் எங்கே இருக்கின்றன என்று புலன் விசாரித்துக் கொண்டேயிருப்போம். இருக்குமிடம் தெரிந்து விட்டால் உடனே திரும்பக் கொண்டு வர நடவடிக்கை எடுப்போம்.''

''சிலைத் திருடர்களின் நோக்கம் என்ன? எப்படிக் கடத்துகிறார்கள்?''

''தமிழ் நாட்டில் உள்ள கோயில்களில், குறிப்பாகத் தஞ்சை மாவட்டத்தில் — கலை நுணுக்கம் மிக்க சிலைகள் ஏராளமாகக் கோயில்களில் இருக்கின்றன. மேலை நாடுகளில் உள்ள பெரிய பணக்காரர்களோ, அல்லது கிளப், ஹோட்டல் நிர்வாகிகளோ இந்தச் சிலைகளை வாங்கி, வரவேற்பறைகளில் அழகுக்காகவும் பெருமிதத்துக்காக



ஆறு கோடி ரூபாய்க்கு விற்கப்பட்ட சிவபுரம் நடராஜர்....



வலதுபுறம் இருப்பது அசல் ஓவியம்: இடதுபுறம் இருப்பது போலி. போலியை வைத்துவிட்டு அசலைத் திருடத் திட்டமிட்டார்கள்... ஆனால் நடக்கவில்லை!

வும் வைக்கிறார்கள். லண்டனிலும், அமெரிக்காவிலும் பல தனியார் மியூஸியங்கள் இருக்கின்றன. இவையும் இந்தச் சிலைகளை வாங்கியும் விற்றும் சுலபமாகப் பணம் பண்ணுகின்றன. சிலை வெளிநாடுகளுக்குச் செல்வது பெரும்பாலும் பம்பாய் வழியாகத்தான். புத்தகக் கட்டுக்களுடனோ அல்லது, சமீபத்திய கைவினைப் பொருட்களுடனோ சேர்த்து வெளிநாடுகளுக்கு அனுப்பி விடுகிறார்கள். இந்தச் சிலைகள் வெளிநாடுகளுக்குச் சென்றாலும், திருடப்பட்டவையாததால், எவ்வளவு பணம் கொடுத்து வாங்கப்பட்டவையாக இருந்தாலும், கண்டுபிடிக்கப்பட்டால் ஒரு கால



கலை நுணுக்கம் மிக்க சோமாஸ்கந்தர்....



தற்போது லண்டனில் இருக்கும் பத்தூர் நடராஜர்......

கட்டத்தில் திருப்பிக் கொடுத்து விடத்தான் வேண்டும்!''

''வெளிநாடுகளில் இருக்கும் திருடப்பட்ட சிலைகளை எப்படி கண்டுபிடிக்கிறீர்கள்?''

''உதாரணத்துக்கு பத்தூர் நடராஜர் சிலை கேஸை எடுத்துக் கொள்வோம். பல வருடங்களுக்கு முன், தஞ்சை மாவட்டம், பத்தூரில் திருடப்பட்ட நடராஜர் சிலை பம்பாய் வழியாக லண்டனுக்குச் சென்று, ஒரு கனடா எண்ணெய் நிறுவனத்துக்கு விற்கப்பட்டு விட்டது. சில வருடங்களுக்குப் பிறகு சிலையைப் பாலீஷ் செய்வதற்காக அந்த நிறுவனம் லண்டனுக்கு அனுப்பியது. அங்கே ஸ்காட்லாந்து யார்டு போலீஸார் கண்ணில் பட்டு விட்டார் நடராஜர். அவ்வளவுதான். தகவல்கள் பறந்தன. இந்திய ஹை கமிஷன் மூலமாக

●● நூற்றில் ஒருவன் நல்ல இதயம் படைத்தவனாக இருக்கிறான். ஆயிரத்தில் ஒருவன் கலைகளில் ஞானம் படைத்தவனாக இருக்கிறான். பத்தாயிரத்தில் ஒருவன் அசையாத துணிவு படைத்தவனாக இருக்கிறான். லட்சத்தில் ஒருவனே கூர்மையான அறிவு படைத்தவனாக இருக்கிறான்.

— தகவல்: என். ஆர். சுப்பிரமணியன், கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம்.

அந்தச் சிலை பத்தூரில் இருந்து திருடப்பட்டதுதான் என்று உறுதி செய்யப்பட்டு லண்டன் கோர்ட்டில் வழக்குப் பதிவாயிற்று.''

''ஸ்காட்லாந்து யார்டு போலீஸ் நமக்கு உதவ வேண்டிய அவசியம் என்ன?''

''உலக நாடுகள் ஒன்றுக்கொன்று போலீஸ் பணியில் உதவிக் கொள்வதற்காக 'இண்டர்போல்' என்ற அமைப்பு இருக்கிறது. சர்வதேசக் குற்றவாளிகளைப் பற்றிய ரகசியங்களைப் பரிமாறிக் கொள்வது அவர்கள் நாடு விட்டு நாடு சென்றால் பிடிக்க உதவி செய்வது போன்றவற்றுக்குத்தான் 'இண்டர்போல்' அமைப்பு இருக்கிறது.''

''வெளிநாட்டு கோர்ட்டுகளில் 'சிலை தமிழ்நாட்டைச் சேர்ந்ததுதான்' என்று எப்படி நிரூபிக்கிறீர்கள்?''

''பத்தூரில் சிலை திருடியவன், பிடிபட்டாலும் தஞ்சாவூர் ஜெயிலுக்குத்தான் போவோம் என்று நினைத்துக் கொண்டிருப்பான். அவன் ஜாதகத்தில் வெளிநாட்டுப் பயணம் என்று இருந்தால் யார் மாற்ற முடியும்? சிலையைத் திருடியவன் தானே அதனை அடையாளம் காட்ட முடியும்? ஆகவே திருடியவர்களை லண்டனுக்கோ, அல்லது வழக்கு நடைபெறும் வேறு இடங்களுக்கோ அழைத்துச் செல்கிறோம்! அவர்கள் அதிர்ஷ்டத்தைப் பார்த்தீர்களா! பல சமயங்களில், சம்பந்தப்பட்ட கோயிலின் குருக்களை அழைத்துச் செல்வதும் உண்டு.

''செம்பனார் கோயிலில் எட்டு சிலைகள் திருடு போயின. திருடப்பட்ட சிலைகளை அடையாளம் காட்ட முத்தையா குருக்கள் அனுப்பி வைக்கப்பட்டார். சிலையைப் பார்த்ததும், குருக்களின் சந்தோஷத்துக்கு அளவே இல்லை. ''எவ்வளவு நாட்கள் ஆனாலும் காணாமல் போன குழந்தையைத் தாய் கண்டுபிடித்து விடுவாள். அது போல இவை எங்கள் கோயில் சிலைகள்தான் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை'' என்று ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார் குருக்கள்!

''திருடப்பட்ட சிலைகளுக்கு விலையை யார் நிர்ணயம் செய்வது?''

''உலோக மதிப்பில் விலை குறைவாக இருந்தாலும் கடவுளுக்கு யார் ரேட் குறிப்பது? கலையுணர்வுடன் படைக்கப்பட்ட இந்தச் சிலைகளை முதலில் திருடியவனுக்கு ஐந்நூறு அல்லது ஆயிரம் ரூபாய் கிடைத்தால் அதிகம். பல கைகள் மாறிச் செல்லும் போது விலை ஏறிக் கொண்டே போகிறது. பத்தூர் நடராஜர் சிலையை கனடா எண்ணெய் நிறுவனம் 32 லட்சம் ரூபாய்க்கு வாங்கியிருக்கிறது. சிவபுரம் நடராஜர் சிலை கடைசியாக அமெரிக்காவில் ஆறு கோடி ரூபாய்க்கு விற்கப்பட்டது. சிலைகளின் மதிப்பு என்பது உலோகத்தின் மதிப்பு அல்ல; கலைத்திறனின் மதிப்பு. அத்துடன் அதன் தொன்மையும் சேர்ந்து கொள்கிறது. சமீபத்தில் வடிக்கப்பட்ட சிலையெனில் அது எவ்வளவுதான் கலை நேர்த்தி மிக்கதாக இருந்தாலும் மதிப்பு குறைவுதான். அபூர்வமான வடிவங்களுக்கு விலை அதிகரிக்கும். தமிழ் நாட்டுக் கோயில்களில் உள்ள சிலைகளின் மதிப்பு கிட்டத்தட்ட மூவாயிரம் கோடி ரூபாய்! தற்போது சிலைகளைத் தவிர பழங்கால ஓவியங்களையும் கோயில்களில் 'அபேஸ்' செய்ய ஆரம்பித்து விட்டார்கள். ஸ்ரீரங்கம் கோயிலில் தஞ்சை ஓவியங்களைத் திருடிய கும்பல் ஒன்று பிடிக்கப்பட்டு இருக்கிறது.''

''சிலையை உருக்கித் தங்கத்தை எடுப்பதாகக் கூறுகிறார்களே?''

''சிலர் தங்கம் இருக்கிறது என்று நம்பிச் சிலையை அபகரிக்கின்றனர். ஆனால் பஞ்ச லோகச் சிலைகளில் கூட ஒரு குண்டுமணி தங்கம் இருக்குமா என்பது சந்தேகமே! திருடர்கள் பலர் அறியாமையால் கண், காது, மூக்கு, வயிறு, மார்பு என்று பல இடங்களில் சிலையை அறுத்து உரைத்துப் பார்க்கிறார்கள். தங்கம் இருந்தால் தானே கிடைக்கும்? சிலை பாழாவதுதான் நிகர லாபம்! சமீபத்தில் ஒரு சிலையைக் கைப் பற்றிய போது 24 இடங்களில் அறுக்கப்பட்டிருந்தது!''

கடைசியாக குற்றப் பிரிவு, இன்ஸ்பெக்டர் ஜெனரல் துரைராஜ் பேட்டி அளித்தார்.

''1972—ம் ஆண்டின் தொல்பொருள் பாதுகாப்புச் சட்டப்படி நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட கலை நுணுக்கம் மிக்க ஒரு சிலையையோ பொருளையோ ஒருவர் வைத்துக் கொண்டிருந்தால் அதைப் பற்றிய விவரத்தை அவர் அரசுக்குத் தெரிவிக்க வேண்டும். அப்படி தெரிவிக்காதபட்சத்தில், சிலைகள் கைப்பற்றப்படுவதுடன் சம்பந்தப்பட்டவர்கள் தண்டனையைச் சந்திக்கவும் நேரலாம். ஒரு சிலையின் பழமையைக் கண்டுபிடிக்கத் தொல்பொருள் நிபுணர்கள் எங்களுக்கு உதவுகிறார்கள்''

''சிலைத் திருட்டைத் தடுப்பது எப்படி?''

''சிலைகளைப் பெரும்பாலும் வெளிநாட்டினர்தான் வாங்குகிறார்கள். நமது தொல்பொருள் சட்டத்தை இந்தியத் தூதரகங்கள் பரவலாக விளம்பரப்படுத்த வேண்டும். அப்படிச் செய்தால் கடத்தல் சிலைகளுக்கு மார்க்கெட் குறையும்.''

**— ப்ரியன்**

படங்கள் உதவி: காவல் துறை.

அட்டை வண்ணப்படம்: **யோகா**




# ஜெ.யின் மனச்சோர்வுக்குக் காரணம் என்ன?

எல்லாரும் ஜோராக ஒரு முறை கை தட்டுங்கள்! தமது அஞ்ஞாத வாசத்தை முடித்துக் கொண்டு வெளிப்பட்டு விட்டார், ஜெயலலிதா! அதுமட்டுமல்ல, தமது கட்சித் தலைவர்கள் சிலரைத் தமது இல்லத்துக்கே அழைத்துப்பேசியும்விட்டார்! கட்சி அலுவலகத்துக்கும் அவர் வருவார் என்று எதிர்பார்த்து ஏமாந்தாலும்கூட, இந்த மட்டில் அவர் தாமே உருவாக்கிக் கொண்ட இரும்புத் திரையை விலக்கிக் கொண்டு வெளி வந்ததே தமிழகம் செய்த தவப்பயன் என்று கருதி, அ. தி. மு. க. தொண்டர்கள் மெய்சிலிர்த்துப் போயிருக்கிறார்கள். கட்சி அலுவலகம் எங்கே ஓடிப் போகிறது? அங்கு வரவேண்டிய நேரத்தில் தலைவி வராமலா இருப்பார்! கே. கே. எஸ். எஸ். ஆரும் திருநாவுக்கரசும் இப்போது போயஸ் தோட்டம் இல்லத்தில் நடந்த கூட்டத்தில் கலந்து கொள்ளா விட்டால் என்ன? இன்னும் எத்தனையோ கூட்டங்கள் நடக்கப் போகின்றனவே. அவற்றில் கலந்து கொண்டால் போயிற்று! ஜெயலலிதாவைச் சந்தித்துத் திரும்பிய தலைவர்களும் உற்சாகமாகக் காணப்படவில்லையென்றால்தான் என்ன? இவர்களுடைய உற்சாகமா முக்கியம்? தலைவியின் உற்சாகமல்லவா முக்கியமானது!

“அதற்கும்தான் பஞ்சம் போலிருக்கிறதே! ‘ஜெயலலிதாவுக்கு மனச்சோர்வா? விரக்தியா?’ என்று பத்திரிகைகள் கேள்விகளை எழுப்புகின்றனவே?” என்றால் பத்திரிகைகளுக்குத் தெரிந்தது அவ்வளவுதான்! அவருடைய உடல் நலமின்மைதான் அவர் உற்சாகமின்மைக்குக் காரணம் என்று சிலர் எண்ணுகிறார்கள். முற்றிலும் தவறு! அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட், தமது நாற்பதாவது வயதில் போலியோ காரணமாக ஒரு காலின் இயக்கத்தையே இழந்தார் என்பதும் ஊன்றுகோலுடன் நடந்தே சமாளித்து மகத்தான சாதனைகளைப் புரிந்தார் என்பதும் ஜெயலலிதாவுக்குத் தெரியாதா என்ன? அத்துடன் ஒப்பிட, மூட்டுவலி அப்படி என்ன பெரிய விஷயமா?

தேர்தலில் வென்று ஆட்சி அமைக்கலாம் என்று எதிர்பார்த்ததில் ஏற்பட்ட ஏமாற்றம் சோர்வாக மாறியிருக்குமோ எனில், அப்படியும் இருக்க முடியாதுதான்! ஜனநாயகத்தில் ஆட்சி அமைப்பதைவிடவும் எதிர்க்கட்சித் தலைவி என்ற பொறுப்பை வகிப்பது முக்கியமானது; அந்தப் பெரிய பொறுப்பை மக்கள் தனக்கு அளித்திருக்கிறார்கள் என்பதை உணராதவரா புரட்சித் தலைவி? அதனால் சோர்வுக்கு அது ஒன்றும் காரணமாக இருக்க முடியாது.

பிளவுண்டிருந்த கட்சியை ஒன்றாக இணைப்பதுதான் நல்லது என்று உணர்ந்து செயல்பட்ட போது நேற்று வரை தம்மைத் தாறுமாறாகத் திட்டியவர்களைக் கூடக் கட்சியில் சேர்த்துக் கொள்ள நேர்ந்ததே என்பதால் ஜெயலலிதா மனம் சோர்ந்து போயிருக்கிறாரா என்றால் அப்படியும் இருக்க முடியாதுதான். தனி நபர்களை விடக் கட்சி முக்கியம் என்பதும் தம்மைத் தூற்றியவர்கள் தம்மிடம் அடிபணிந்தால் அவர்களுக்குத்தான் தலைகுனிவே தவிர தமக்கு அல்ல என்பதும் அவருக்குத் தெரியாதா என்ன?

ஜானகி அரசியலிலிருந்து விடைபெற்

**செம்பியன்**

> உணவு உண்டபின் எச்சில் இலைகளை வேலைக்காரர்கள் பங்களாவிற்குப் பக்கத்திலேயே போட்டிருந்தார்கள். மாலையில் பங்களாவைச் சுற்றி வந்த மகாத்மாவிற்கு இது அருவருப்பாக இருந்தது. தம் தடியை ஓரிடத்தில் சாத்தி வைத்தார். தாமே குனிந்து, சிதறிக் கிடந்த எச்சில் இலைகளை எடுத்துச் சுத்தம் செய்ய ஆரம்பித்தார். அதைப் பார்த்துக் கொண்டிருந்த அனைவருக்கும் பயமும், பீதியும், துக்கமும் உண்டாயின. மன்னிக்குமாறு காந்திஜியைக் கேட்டுக் கொண்டார்கள். அனைவரும் சேர்ந்து சில நிமிடங்களில் அந்த இடத்தைச் சுத்தம் செய்து முடித்தார்கள்!
>
> — தி. க. அவினாசிலிங்கம் எழுதிய 'நான் கண்ட மகாத்மா' விலிருந்து.
>
> — "சேலம் சக்திக் கனல்."

றுத் தப்பிப் போய் விட்டாரே, தம்மால் முடியவில்லையே என்ற ஏக்கம்தான் ஜெயலலிதாவின் உற்சாகக் குறைவுக்குக் காரணமா? அவ்வாறு இருக்கவே முடியாது! தேர்தலில் ஜானகி அடைந்த படுதோல்விக்கும் பிரதான எதிர்க்கட்சியாக விளங்கும் அளவுக்குத் தாம் பெற்ற வெற்றிக்கும் இடையில் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருப்பதைச் சிந்தனைச் செல்வி அறியாதவரா? மேலும் இரு அணிகளும் ஒன்று சேர்ந்தது இடைத்தேர்தலில் மகத்தான வெற்றி பெற்றுத் தரவில்லையா?

ராஜினாமா கடிதம் அம்பலப்படுத்தப்பட்டதும், பின்னர் சட்டமன்றத்தில் ஏற்பட்ட அமளியும் ஒருவேளை மனச்சோர்வை ஏற்படுத்தியிருக்கலாம்தான். ஆனால் அதன் மறுபக்கமாக மக்களிடம் தமக்குக் கிடைத்த அளவிட முடியாத விளம்பரத்தையும் அனுதாபத்தையும் கணக்குப் போட்டுப் பார்க்கத் தெரியாதவர் அல்ல எம். ஜி. ஆரின் அரசியல் வாரிசு!

அ. தி. மு. க. வின் கணக்கு வழக்குகள் பற்றி எழுந்த கேள்விகள் ஒருவேளை சோர்வுக்குக் காரணமாக இருக்கலாமோ என்று யோசிப்பதில் அர்த்தமில்லை. ஏனெனில் இதைவிடப் பெரிய தில்லுமுல்லுகள் வேறு பல கட்சிகளில் இருப்பதாகக் குற்றச்சாட்டுக்கள் உள்ளன. அதைப் பற்றி யாரும் எப்போதும் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை! இந்த விஷயம் நேற்றைய எம். பியும் இன்றைய எம். எல். ஏயுமான ஜெ.க்குப் புரியாமல் போகாது.

பிறகு என்னதான் ஜெயலலிதாவின் ஊக்கமின்மைக்குக் காரணம்? ஒருவேளை... ஒருவேளை... நடராஜன் — சசிகலா தம்பதியின் ஆளுமையிலிருந்து அவரால் விடுபட முடியாமல் இருப்பதாகக் கூறப்படும் குற்றச்சாட்டுக்கள்தான் அவருடைய மனச்சோர்வுக்குக் காரணமா?

ஐயய்யோ! அதைப் பற்றிப் பேசலாமா — எழுதலாமா? உமக்குப் போதாத வேளைதான்! அவதூறு வழக்குப் போடப்படும்! ஜாக்கிரதை!

# கல்கி ஆகஸ்ட் 6ல் ஆண்டு மலரில்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப்
போட்டியில் ரூ.1500 பரிசு பெறும்
முதல் பரிசுக் கதை



## பாலகுமாரன்

எழுதும்

# இரண்டாவது சூரியன்

தொடர்கதை ஆரம்பம்

ஈரோட்டிலுள்ள உழவன் நகரில் வசித்து வந்த மங்கையர்க்கரசி, கடந்த 25.3.89 — இல் இறந்து போய் விட்டார். தனது புடைவையைக் கொண்டு தூக்கு மாட்டிக் கொண்டு தானே தற்கொலை செய்து கொண்டதாக மங்கையர்க்கரசியின் கணவர் அருள்வேலுவும் அவரைச் சார்ந்தவர்களும் கூறுகிறார்கள். ஆனால் மங்கையர்க்கரசியின் தந்தை ராமலிங்கமோ, அது தற்கொலையல்ல; புகுந்த வீட்டுக்காரர்களால் செய்யப்பட்ட கொலைதான் என்று உறுதியாகச் சொல்கிறார். எது உண்மை? நேரில் சென்று விசாரித்தோம்.

மங்கையர்க்கரசியின் தந்தை ராமலிங்கம் சொன்னார்:

"என் மகளுக்கும் அருள்வேலுவுக்கும் 83—இல் கல்யாணம் நடந்தது. முப்பது பவுன் நகை போட்டேன். கட்டில், மெத்தை, பீரோ, பாத்திரம், பண்டம்... என்று எதிலும் குறையில்லாமல் சீர் செய்தேன். மொத்தம்



* மங்கையர்க்கரசியும் அருள்வேலுவும்...

# மங்கையர்க்கரசியின் மரணம்

**— ஒரு நேரடி ரிப்போர்ட்**

எனக்கு நான்கு பெண்கள். மூவருக்குக் கல்யாணம் முடிந்து விட்டது. மங்கையர்க்கரசி இரண்டாவது பெண். மற்ற இரண்டு பெண்களின் புகுந்த வீடுகளிலும் கார் உண்டு. அவர்களின் சொந்தக் கார் அது.

"ஆனாலும் மாப்பிள்ளை அருள்வேலு, மங்கையர்க்கரசியிடம், 'உங்கப்பனைக் கார் வாங்கித் தரச் சொல்லு'ன்னு கொடுமைப்படுத்த ஆரம்பிச்சார். அதோடு 'ஐயாயிரம் வாங்கிக்கிட்டு வா... பத்தாயிரம் வாங்கிக்கிட்டு வா'ன்னு அடிக்கடி என் வீட்டுக்கு அனுப்புவார்கள். நானும் நம்முடைய பெண்ணுக்குத்தானே செய்கிறோம் என்று இதுவரை ஐம்பத்தைந்தாயிரம் ரூபாய்வரைக்கும் கொடுத்திருக்கிறேன்.

"முதல் பேரன் பிறந்த போது பத்துப் பவுனில் நகை போட்டால்தான் தங்கள் வீட்டுக்கு அழைத்துச் செல்வோம் என்று மங்கையர்க்கரசியின் கணவர், மற்றும் மாமனார், மாமியார் ஆகியோர் பிடிவாதமாகக் கூறினார்கள். நானும் போட்டு அனுப்பினேன். இரண்டாவது பேரன் பிறந்த போதும், அதே மாதிரி ஐந்து பவுன் போட வேண்டியதாயிற்று. இது தவிர, பொங்கல், தீபாவளி என்றும் இதுவரை ஐந்து பவுன் போட்டிருக்கிறேன்.

"இத்தனை செய்த பிறகும் கூட என் மகளைத் தொடர்ந்து கொடுமைப்படுத்தியிருக்கிறார்கள். ஒழுங்காகச் சாப்பிடக் கூட விடுவதில்லை. கடைசியாக, வியாபார அபிவிருத்திக்கு வேண்டுமென்று சொல்லி என்னிடம் இரண்டு லட்ச ரூபாய் வாங்கி வர வேண்டுமென்றும் அதோடு நான் குடியிருக்கும் வீட்டையும் அவர்கள் பெயருக்கு எழுதித் தரச் சொல்ல வேண்டுமென்றும் இல்லையானால் அவளைக்கொன்றுதூக்கில் போட்டு விடுவதாகவும் மிரட்டினார்களாம். இதையெல்லாம் என் மகள் என்னிடம் வந்து சொல்லி அழுதாள். அப்படி வந்து சொல்லிய இரண்டாம் நாளே, அவள் தூக்கில் தொங்கிச் செத்து விட்டதாகச் செய்தி வந்துவிட்டது..."

"உங்கள் மகளைக் கொலைதான் செய்து விட்டார்கள் என்று எப்படி உறுதியாகச் சொல்லுகிறீர்கள்?"

"மூன்று வயதிலும், ஒரு வயதிலுமாக இரண்டு ஆண் குழந்தைகளை வைத்திருக்கும் தாய் ஒருத்தி எப்படித் தற்கொலை செய்து கொள்ள நினைப்பாள்? அதோடு என் பெண்ணின் கால்கள் இரண்டையும் கட்டிப் போட்ட தடயத்தையும், கழுத்துப் பகுதியில் நகக்குறிகள் பதிந்த தடயங்களையும் கண்டேன். அவளுடைய தொடைப் பகுதிகளில் அடித்துக் கன்றிப் போயிருந்ததை என் மனைவி பார்த்திருக்கிறாள்..."

"உங்கள் பெண்ணே தனது மரணம் தற்



• தாயைப் பறிகொடுத்த குழந்தைகள்...



• விசாரணையைத் தீவிரப்படுத்தக் கோரி மாவட்ட ஆட்சித் தலைவரிடம் மனு...



கொலைதான் என்று கடிதம் எழுதி வைத்திருப்பதாகச் சொல்கிறார்களே?

''அது அவள் எழுதிய கடிதமே இல்லை. அவள் எப்போதுமே 'மங்கையர்க்கரசி' என்று இங்கிலீஷில்தான் கையெழுத்துப் போடுவாள். இந்தக் கடிதத்திலோ 'மங்கை' என்று தமிழில் போடப்பட்டிருக்கிறது. பத்தாவது படித்திருக்கும் என் மகள் 'என் சாவுக்கப்புறம் என் குழந்தைகளை அப்பாவிடம் விற்றவும்'னு பிழையோடு எழுதுவாளா? எனவே இது நிச்சயம் கொலைதான். அதனால்தான் நான் கொடுத்த பணத்தையும் நகைகளையும் பேரக் குழந்தைகளின் பெயரில் டெபாஸிட் செய்ய வேண்டுமென்று சொல்கிறேன்,'' என்றார் ராமலிங்கம்.

**ம**ங்கையர்க்கரசியின் கணவர் அருள்வேலுவிடம் விசாரித்த போது, ''செத்துப் போனவ செத்துப் போயிட்டாங்க. மாட்டிக்கிட்டு முழிக்கிறது நாங்க. அவ ஜாதகமே அப்படிப்பட்ட ஜாதகம். பொய் ஜாதகம் கொடுத்து ஏமாத்திக் கல்யாணம் பண்ணிட்டாங்க. என் மாமனார் சிறிய அளவில் ஜவுளி வியாபாரம் பண்றவர். அவர்கிட்டப் போய் எப்படி ஐயாயிரம், பத்தாயிரம்னு வாங்கிக்கிட்டு வரச் சொல்லுவோம்? இரண்டு லட்ச ரூபாய் கேட்போம்? எங்க ஜாதியில் பொண்ணு செத்ததுக்கப்புறம் பஞ்சாயத்துப் பண்ணி நியாயம் வாங்கித் தர்றவங்களைத்தான் பார்த்திருக்கோம். இப்படியா பத்திரிகைல விஷயம் வர்ற மாதிரி கேவலமா நடந்துக்கறது? அவ சாவறதுக்கு ரண்டு மாசம் முன்னாடி கூட அவங்க வீட்ல எல்லார் கூடவும் திருவண்ணாமலை, காஞ்சிபுரம்னு ஜாலியா டூர் போனேன். பணம் செலவு செஞ்சேன். ரண்டு பசங்க இருக்கிற பொண்ணைக் கொல்ல யாருக்குங்க மனசு வரும்?'' என்றார்.

**அ**ருள்வேலு தற்சமயம் இருக்கும் உழவன் நகருக்கு வரும் முன்பு ராமலிங்கம் வீட்டிற்கு அருகிலேயே மூன்று வருடங்கள் குடியிருந்தார். அங்கு சென்று மற்றவர்களை விசாரித்த போது, ''மங்கையர்க்கரசி ரொம்ப நல்ல பொண்ணுங்க. அருள்வேலு அவங்கம்மா பேச்சை மீற மாட்டாரு. அந்தம்மா மருமகளைக் கொஞ்சமாவா படுத்திச்சு? சம்பந்தி வீட்டு மனுஷா பொண்ணைத் தேடி வந்தாக் கூட வீட்டுக்குள் கூப்பிடாம வாசல்ல நிக்க வெச்சேதான் பேசுவாங்க. மாமியார் கொடுமை தாங்காம மங்கை நிறைய முறை அழுதிருக்கு. மங்கையின் நாத்தனார் புருஷனுக்கு அம்மை வந்து கண் பார்வை போயிடுச்சு. அதனால் அவரும், நாத்தனாரும் இவங்க வீட்லதான். அதனால, 'என் பொண்ணு வாழ்வே போயிடுச்சு. உனக்கு மட்டும் எதுக்கடி புருஷனோடு தனிப் படுக்கை?'ன்னு மங்கையை அவ மாமியார் புருஷன்கிட்டேயிருந்து பிரிச்சே வெச்சாங்க...'' என்றார்கள்.

**போ**லீஸ் தரப்பு உள்பட பல்வேறு தரப்புக்களையும் விசாரித்த நமக்கு, மங்கையர்க்கரசியின் மரணத்தில் கீழ்க்கண்ட சந்தேகங்கள் எழுகின்றன.

1. மரணம் நிகழ்ந்தது 25.3.89 – ஆம் தேதி. போஸ்ட்மார்ட்டத்திற்குப் பிரேதம் கொண்டு செல்லப்பட்டது 26.3.89 – ஆம் தேதி. போஸ்ட்மார்ட்டம் நடந்ததோ 26.4.89– ஆம் தேதி! இந்த ஒரு மாத கால இடைவெளிக்குக் காரணம், போஸ்ட்மார்ட்

டம் செய்யும் இரு டாக்டர்களில் ஒருவர் பதினைந்து நாட்கள் விடுப்பில் இருந்தது தான் என்று போலீஸ் தரப்பில் கூறப்படு வதை நம்ப முடியவில்லை.

2. மங்கையர்க்கரசி எழுதி வைத்ததாகச் சொல்லப்படும் கடிதம் பற்றிப் பார்வை மகஜர், கைப்பற்றுதல் மகஜர் ஆகியவற்றில் எதுவுமே குறிப்பிடப்படவில்லை. நேரடி யாக மேலதிகாரிகளிடமே அருள்வேலு மற்றும் அவரது தந்தை, தாய்மாமன் ஆகி யோர் இக்கடிதத்தைக் கொடுத்திருக்கிறார் கள் என்பது உண்மைக் கடிதம்தானா அது என்ற சந்தேகத்தை உண்டாக்குகிறது.

3. மங்கையர்க்கரசி தூக்குப் போட்டுக் கொண்டதாகச் சொல்லப்படும் அறையில் ஒரு ஸ்டூலின் உதவியின்றித் தாமாகவே தூக்குப் போட்டுக் கொண்டிருக்க முடி யாது. ஆனால் அங்கே ஸ்டூல் ஏதும் இருந்த தாகத் தெரியவில்லை.

4. தூக்கில் தொங்கிய மங்கையர்க்கரசி யை, வெளியில் சென்று கொண்டிருந்த ஒரு நபரின் உதவியோடு இறக்கியதாகச் சொல் லும் அருள்வேலுவின் பெற்றோர் அந்த நபரைப் பற்றிய தெளிவான விவரங்களைக் கொடுக்க மறுப்பதேன்?

5. கடந்த 31.5.89 அன்றே ரசாயனப் பரிசோதனைக்காகப் பிரேதத்தின் பாகங் கள் கோவைக்கும் சென்னைக்கும் அனுப் பப்பட்டிருந்தும் இன்னும் அதன் முடிவுகள் வராததன் காரணம் என்ன?

6. இந்த வழக்கு பற்றிப் பெண்ணின் தந்தையோடு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி யின் சகல பிரிவுகளும் சேர்ந்து கொண்டு பலருக்கும் புகார் அனுப்ப ஆரம்பித்த பிறகுதான் போலீஸ் துறை வேகமாகச் செயல்பட ஆரம்பித்திருக்கிறது.

7. ஒரு புதிய திருப்பமாக, இந்த வழக்கு விசாரணையில்-தேவையில்லாமல் கால தாமதம் செய்திருப்பதாகவும் முறைகேடுகள் நடத்திருப்பதாகவும் சொல்லி, சம்பந்தப் பட்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் தியாக ராஜனை கோவை டி. ஐ. ஜி. காளிமுத்து சஸ்பெண்ட் செய்திருப்பதும், வழக்கு விசாரணையில் அலட்சியம் காட்டியதாக டி. எஸ். பி. பாஸ்கரனுக்கு சார்ஜ் மெமோ கொடுத்திருப்பதும் மங்கையர்க்கரசியின் மரணம் தற்கொலையல்ல என்ற வாதத்துக்கு வலிமை சேர்ப்பதாக உள்ளது.

கொலைதான் என்பது நிரூபணமானால் குற்றவாளிகள் இனம் காணப்பட்டுத் தண் டனை பெறுவது ஒருபுறமிருக்கட்டும். தற் கொலை என்றே முடிவானாலும் கூட அது நமது சமூகத்துக்கே தலைகுனிவுதான். தேசத் தந்தை உள்பட எத்தனையோ தலைவர்கள் பெண் விடுதலைக்காகப் பாடு பட்டிருந்த போதிலும் அதனைக் கொடுக்க மறுப்பவர்கள் நமது சமூகத்தில் இன்னும் கொழித்துக் கொண்டுதானே இருக்கி றார்கள்!

— சத்தியப்ரியன்





# கொடுமை அய்யா, கொடுமை...




இந்த வருடம் புதிதாக மாறியுள்ள புத்தகங்களை நாளையே, கொண்டுவர வேண்டும் என்று பள்ளியில் கெடுபிடி. ஆனால் அந்தப் புத்தகங்கள் கடைகளில் கிடைப்பதில்லை. ஒரே ஒரு கடையில்தான் அந்தப் புத்தகம் உள்ளது என்று அறிந்து, அங்கு சென்று கேட்டால், "இந்த நோட்டுகள் பத்து வாங்கினால் ஒரு புத்தகம் விலைக்குத் தருவோம்" என்கின்றனர். ஒரு நோட்டின் விலை நாலு ரூபாய்! பதினாலு ரூபாய் மதிப்புள்ள புத்தகம் வாங்க, தேவையில்லாத நிலையில் நாற்பது ரூபாய்க்கு நோட்டுப் புத்தகங்கள் வாங்க வேண்டும்! அந்தப் புத்தகத்தை இன்றே வாங்கிக் கொடுக்காவிடில் நாளை முதல் வெயிலில் நிற்க வேண்டும் என்ற கொடுமை நம் அருமைச் செல்வங்களுக்கு! தமிழக அரசு குறித்த காலத்தில் தேவையான அளவு புத்தகங்களை வெளிவிட்டு இந்தக் கொடுமையைத் தவிர்க்கக் கூடாதா?

மதுரை. எஸ். காவேரி.

கல்கி 25.6.89 இதழில் "விவாதத்துக்கு ஒரு முடிவுரை" படித்தேன். இளநிலைப் பட்டப் படிப்பு அளவில் தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் சில ஆண்டுகளாகப் பாடம் கற்பித்து வருபவன் நான். தமிழ் மொழியில் படிக்கும் மாணவர்கள் தான் பாடத்தை நன்கு புரிந்து கொள்கிறார்கள். தமிழ் மீடிய மாணவர்கள் தான் பரீட்சையில் அதிக மதிப்பெண்களைப் பெறுகிறார்கள் — அதிக எண்ணிக்கையிலும் வெற்றி பெறுகிறார்கள். இது அனுபவ உண்மை.

"இங்கிலீஷ்' மீடியம், 'இங்கிலீஷ்' மீடியம் என்று அடித்துக் கொண்டு சேர்ந்த மாணவர்களெல்லாம், கடைசியில் பல்கலைக் கழகத் தேர்வை எந்த மொழியில் எழுதுவார்கள் தெரியுமா? 99 சதவீத மாணவர்கள், தேர்வைத் தமிழில்தான் எழுதுகிறார்கள்! என்னே விந்தை இது! அப்புறம் எதற்கு 'இங்கிலீஷ்' மீடியம்?

தனியார் கல்லூரிகளில் தமிழ் மீடியமே இல்லை — ஆனால் அங்கேயும் 60 சதவீதத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் தேர்வைத் தமிழில் தான் எழுதுகிறார்கள்!

• கல்லூரி ஆசிரியர்களுக்கு Tamil Orientation Courses நடத்துகிறார்கள். அதாவது 'தமிழில் எப்படி பாடங்களை நடத்துவது?' என்று கற்றுத் தருவதற்காக! இந்தப் பயிற்சியில் 'எல்லா கலைச் சொற்களையும் தமிழ்ப் படுத்தக் கற்றுக் கொடுக்கிறோம்' என்று நம்மைப் பாடாய்ப் படுத்துவார்கள். நீங்கள் சொல்லியுள்ள 'தமிழின் முதல் எதிரிகளால் வரும் வினைதான் இது! எல்லா கலைச் சொற்களையும் தமிழ்ப் படுத்த முடியும். சில சமயங்களில் ஆங்கிலத்தை விட அழகாகவும், பொருத்தமாகவும் கூட தமிழில் வார்த்தைகள் அமையலாம். ஆனால் அது தேவை தானா? அதனால் பயன் என்ன? (குண்டுச் சட்டிக்குள் குதிரை ஓட்டலாம்!).

'கலைச் சொற்களை அப்படியே ஆங்கிலத்தில் வைத்துக் கொண்டு, பாடத்தைத் தமிழில் கற்பிக்கலாம்' என்ற முடிவை அரசும், கல்வியாளர்களும் எடுக்கத் தயங்குவதால் தான், பட்டப் படிப்பு வரை வந்து விட்ட தமிழ் மீடியம், முதுநிலைப் பட்டப் படிப்பு வகுப்பிற்குள் நுழையத் தயங்கி நிற்கிறது!

எங்களைப் பொறுத்தவரை சொந்த விருப்பத்தை ஒரு புறம் ஒதுக்கி வைத்து விட்டு, கலைச் சொற்களையும் தமிழ்ப் படுத்தித்தான் பாடம் நடத்தி வருகிறோம். எங்களால் முடிந்தது ஒன்றுதான் — கலைச் சொற்களைத் தமிழில் சொல்லும் போதெல்லாம் கூடவே அதன் ஆங்கில வார்த்தையையும் கூறி அடைப்புக் குறியிட்டு எழுதிக் கொள்ளச் சொல்வோம். இதை மட்டுமே தமிழ் வளர்ச்சிக்காக இப்போதைக்கு எங்களால் செய்ய முடிகிறது.

கோடி, கோடியாக விழுங்கி விட்டுப் பிறந்திருக்கும் 'தஞ்சை தமிழ் பல்கலைக் கழகம்' செய்யும் முக்கியமான வேலைகளில் ஒன்று என்ன தெரியுமா? — கலைச் சொற்களைத் தமிழ்ப் படுத்துதல்தான்! — கொடுமை போங்கள்!

மின்னல் வேகத்தில் செல்லும் வெளியுலக வளர்ச்சியோடு நாம் தொடர்பு கொள்ள வேண்டுமானால் — அதற்கு ஒரே துணை — ஆங்கிலம் தான். ஆகையால் அதனைப்புறக்கணித்து விடவும் கூடாது. இன்றைய மாணவர்களின் ஆங்கில அறிவு மிகமிக மட்டமாகிக் கொண்டிருக்கிறது என்பதுதான் உண்மை

மன்னார்குடி. ரா.கோ.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

ஆகவே நானும்
விவேகானந்தா கல்வி
நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே, இப்பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப படிவத்தையும்
கீழ்க்கண்ட எனது
முகவரிக்கு உடனே அனுப்பவும்

முகவரி:
S. சுதாகர்
30, ஆதிமூலம் பிள்ளை சந்து
வடக்கு ஆவணி மூல வீதி
மதுரை - 625006

WRITE PIN CODE IN ADDRESS




To
விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
No 9, மேட்லி ரோடு
தி. நகர்,
சென்னை
PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA

"என்ன சோலை?''

''ஊர்ல இருந்து நேரா வர்றேன் மாமா...''

''திடீர்னு என்ன விசேஷம்?''

''எல்லாம் விசாரணைக்குத்தான்...''

''விசாரணையா?''

''நம்ம நாட்டாண்மை மகன் விசயந்தான். அவளை இழுத்துக்கிட்டு ஓடினவன் கல்யாணமே பண்ணிக்கிட்டானாம்.''

கல்!... ஆழம் பார்க்க எறிந்த கல். 'க்ளக்' கென்று கனம் இறங்க, மனசு அழுந்தியது.

''என்னப்பா சொல்றே?''

''நெசந்தான் மாமா. ஊரே கெதி கலங்கிக் கெடக்குது. உங்களுக்கும் தெரியும்னு நெனைச்சேன்.''

தவசுப் பிள்ளை கண்களை மூடிக் கொண்டார். நாட்டாண்மை பெரிய தலைக்கட்டு. ரெட்டிணங்கால் போட்டு அதிகாரம் பண்ணியவர். பஞ்சாயத்து, வழக்குகளில் நடுவில் அமர்கிறவர். ''எனக்கு மேல எவண்டா?'' என அதிர்ந்து சிரிக்கப் பழகியவர். அவர் பையனா?

பெருமை, கௌரவமெல்லாம் சில தலைமுறைகளுக்கு மட்டும்தானா?

''நம்ம ஊருக்குச் சத்துணவு போடறேன்னு ஒரு குட்டி வந்திருக்கா. படிச்சவ. செவத்த உடம்பு. பய மயங்கிட்டான். ரெண்டு மாசமா அப்பன்கூட தகராறு. போன வாரம் கிளம்பிட்டாக...''

கடவுளே... கடவுளே...!

''பையனோ, பெண்ணோ...?காலாகாலத்துல காரியத்தைப் பண்ணி வச்சுரணும். இல்லைன்னா அப்படித்தான்.... அந்தந்த வயசுல ஆசை வரத்தானே செய்யும்... என்ன நான் சொல்றது? நாலும் தெரிஞ்சவரு நீங்க. இவன் என்னடா சொல்றதுன்னு நெனைக்கப்படாது. இன்னிக்கு உலகம் போற தினுசே வேறே. பையனை இன்னும் விட்டுக்கிட்டு இருக்கிறது சரின்னு தோணலை. சீக்கிரமா ஒருத்தியைப் புடிச்சு வச்சிருங்க மாமா...

சொந்த ஊர்க்காரன் என்று கொஞ்சம் மரியாதை உண்டு. சமீபத்தில் அடிக்கடி வந்தான். தன் மச்சினன் மகளுக்குக் குமரேசனைப் பேசுவதற்காக – இத்தனை பவுன் போடறோம் மாமா – இன்னின்னது செய்யறோம் மாமா —

''எங்கேப்பா... பொண்ணை வீட்ல வச்

# வயசுப் பிள்ளை...

சுக்கிட்டு என்னத்தைப் பண்றது? அதை ஒரு மகராசன் கையில புடிச்சுக் குடுத்தப்புறம் தான் பையனுக்கு'' என்று அவரும் இரண்டு, மூன்று தடவை நேரடியாகவே சொல்லி விட்டார்.

அப்படியும் இன்றைக்கு வந்திருந்தான்.

இதற்குத்தான் 'நேராக' இங்கே வருகிறானோ?

படபடவென்று வந்தது. ''போடா... நீயும் உன் நாயமும்'' என்று அடித்து விரட்டத் தோன்றியது.

''எம் புள்ளைகளைப் பத்தி உனக்கு என்னடா தெரியும்?'' என மனசுக்குள் கேட்டுக் கொண்டார்.

சொந்த பந்தமென்று ஊரிலிருந்து யார் வந்தாலும் முதலில் பேசுகிற விஷயம் இதுதான்.

''என்னடி இவளே... பொண்ணையும் பையனையும் வச்சுக்கிட்டு ஒண்ணும் பண்ணாம இருக்கிகே. நல்லாவா இருக்கு?''

காமாட்சி தானே ஏதாவது சொல்லிச் சமாளிப்பதும் உண்டு. ''எல்லாம் அந்த ஆம்பளையைக் கேளுங்க...'' என்று அனுப்பிய நாளும் உண்டு.

''நேரம் வந்தா தானா நடக்கும். நடக்காம எங்கே போகுது?'' என்று பொதுவான வேதாந்தம் பேசித் தவசுப் பிள்ளை தலையைக் கவிழ்த்துக் கொள்வார். அந்த நேரமெல்லாம் மனசு ரொம்பவும் கசந்து விடும் அவருக்கு. தனது 'ஆம்பளைத் தனத்தை' காலில் போட்டு மிதித்த மாதிரி ஒரு வேதனை.

அப்பன், பாட்டன் வாழ்ந்த வாழ்க்கை எங்கே? இது எங்கே? காலம் இப்படியுமா குப்புறத் தள்ளும்?

கோழி குப்பையைக் கிளறுகிற மாதிரி மனசு எதெதையோ புரட்டிப் பார்க்கும்.





கணவன் : "நம்ம போஸ்ட்மேனுக்கு இருந்தாலும் இந்தக் கிண்டல் கூடாது...

மனைவி: "என்ன செஞ்சாரு?"

கணவன் : "என்னோட நூறாவது கதை திரும்பி வந்ததுக்கு 'பார்ட்டி' கேக்கறாரு"

— வி. கிருஷ்ணக்குமார்.

காமாட்சிக்குத் தாலி கட்டும் போது அவருக்குப் பத்தொன்பது வயது. தெரு அடைத்த பந்தல் போட்டுக் கல்யாணம். சதுர்க் கச்சேரி. மாப்பிள்ளை அழைப்பிற்குக் குதிரைச் சவாரி. அதெல்லாம் அந்த நாளில் பெரிய விஷயம்.

"அந்த மவுசில் நூத்துல ஒரு பங்காவது எம்புள்ளைகளுக்குத் தர மாட்டானா இந்த ஆண்டவன்...?"

தாத்தாவும், அப்பாவும் அடுத்தடுத்து போய்ச் சேர்ந்தார்கள். தனியாக அவர் தொழிலைக் கவனிக்க உட்கார்ந்த போது கூட நிலைமை நன்றாகத்தான் இருந்தது. வேளை தவறாமல் விருந்தும், 'கவுச்சி'ச் சாப்பாடும், சலவை உடுப்பு உடுத்துவதும், நாலு இடங்களுக்குப் போய் வருவதும்...

டவுனில் ஆலைகள் அமைத்து, டின்களில் எண்ணெய் வரத் துவங்கியது முதல் கெட்ட காலம் ஆரம்பித்தது. அப்பாவு நாடாரின் டின் சரக்கு உள்ளூர்ச் சந்தைக்குக் கூட விற்பனைக்கு வந்தது. அதன் பிறகும் அந்த பிராண்ட் இந்த பிராண்ட் என போட்டி போட்ட பண முதலைகள்...

வெறும் மாட்டுச் செக்கில் எண்ணெய் ஆட்டி விற்கும் இவரது தொழில் சுருங்கியது. பெயருக்கு ஒரு ஜோடி மாடுகளை வைத்துக் கொண்டு கொஞ்ச காலம் நடத்திப் பார்த்தார். சரக்குச் சுத்தம் என்பதற்காகத் தேடி வரும் சில வாடிக்கையாளர்களை மட்டும் வைத்துக் கொண்டு, நாலைந்து உருப்படிகள் வயிற்றைக் கழுவ முடியுமா?

"எங்கப்பனே... ஒரு நல்ல வழி காட்டு..." எனக் கலங்கி நின்ற தருணம், குமரேசனுக்கு டவுனில் ஒரு ஃபாக்டரியில் வேலை கிடைத்தது.

"எனக்கும் சோறு தண்ணிக்குக் கஷ்டம். இங்கேயும் பொறுப்பு இல்லை. எதுக்கு ரெண்டு செலவு? என் கூடவே வந்துடுங்க...." என்ற அவனது வார்த்தையில் குடும்பம் டவுனுக்கு வந்துவிட்டது.

வந்த மாதமே மூத்தவள் உட்கார்ந்தாள். நான்கு வருஷங்கள் வைத்திருந்து இரண்டு வருஷங்களுக்கு முன்பு கல்யாணம் பண்ணிக் கொடுத்தார்கள். குமரேசன் சேமித்தது, கடன் வாங்கியது போகக் கிராமத்திலிருந்த வீட்டையும் விற்றுத்தான் அவளை ஒப்பேற்றும்படி ஆயிற்று.

அடுத்தது சீதா...

இவளுக்குத்தான் பெரும்பாடாக இருந்தது. மாநிறம். சற்றே மெலிந்த தேகம், நெடுநெடுவென்று வளர்ந்திருந்தாள். வருகிறவர்கள் இதையெல்லாம் ஈடுசெய்கிற மாதிரி தானே கேட்கிறார்கள். தங்கம் கொஞ்ச விலையா? அல்லது மற்ற பொருட்களின் விலைதான் குறைவா? அவன் ஒருத்தனின் வருமானத்தில் வீட்டு வாடகை கொடுத்து வயிற்றைக் கழுவி, மிச்சம் பிடித்துத் தங்கைக்கும் கல்யாணம் பண்ணி, அவனும் மாப்பிள்ளையாக உட்காருவது இலேசுப்பட்ட காரியமா? என்னதான் செய்ய நினைத்திருக்கிறான் இந்த ஆண்டவன்?

'அந்தந்த வயசுல வர்ற ஆசைகள்...' சோலையின் வார்த்தைகள் மீண்டும் குறுகுறுத்தன. வயசுக்கு ஆசை வருமா?

வந்ததால்தானே நாட்டாண்மையின் பெருமை சந்தி சிரிக்கிறது. பத்தொன்பதில் கல்யாணம் பண்ணிய தனக்கு அனுபவம் இல்லாதிருக்கலாம். முப்பதைத் தாண்டியும் காத்துக் கிடப்பவனின் மனசு எப்படியோ? குமரேசன் எதையும் இதுவரைக்கும் வாய் விட்டுச் சொன்னவன் இல்லை. உள்ளே எத்தனை ஆசைகளைப் புதைத்து வைத்துக் கொண்டிருக்கிறானோ குழந்தை.

நினைக்க நினைக்க மனசு அலைந்தது. அப்படியும் இப்படியுமாகத் தவித்தது. 'என்னத்துக்கு இம்புட்டுப் பாடு? அவனையே கேட்டுடறது... பெத்த புள்ளையா இருந்தா என்ன. பேசிப் பார்த்தாத்தானே மனசுல இருக்கிறது வெளியில தெரியும்?'

நேரம் செல்லச் செல்ல இந்த யோசனையே வலுத்தது.

"அதான் சரி..." என்று தீர்மானத்துடன் எழுந்தார். மனத்தில் சற்றுச் சுமை குறைந்த மாதிரி இருந்தது.

"எந்த தேசத்தைப் பிடிக்கிறதுக்கு இவ்ளோ யோசனை?" என அருகே வந்தாள் காமாட்சி. மகள் சீதாவும் வந்தாள்.

"ம்?" என்று நிமிர்ந்த தவசுப் பிள்ளை பதிலொன்றும் சொல்லவில்லை.

"அப்படி உக்காரு..." என ஜாடையில் சொல்லி விட்டு, மகள் பக்கம் திரும்பி, "நீ உள்ளே போம்மா..." என்றார்.

பேச ஆரம்பித்தார்.

முக்கிய விஷயங்களை இப்படித்தான் நெருங்கி உட்கார்ந்து பேசுவார்கள். உள் அறையில் காதைத் தீட்டிய சீதாவுக்கு, கல்யாணம் — பிள்ளை — பையன் என்ற வார்த்தைகள் மட்டும் கேட்க, தன்னைப்

பற்றிய பேச்சுத்தான் என எண்ணும்படியாக இருந்தது. தன்னுள் ஏதோ சங்கீதம் பரவுகிற மாதிரி இருந்தது அவளுக்கு. நரம்புகள் மெல்லிசாக மீட்டப்பட கண்கள் செருகி கனவு காண ஆரம்பித்தாள். சௌந்தர்யம் மிகுந்த புருஷனுடன் கைகோத்து உலாச் செல்லும் கனவுகள் அவை.

"இதென்ன அக்ரமமா இருக்கு?" என்றாள் காமாட்சி. அவளுக்கு அவரது யோசனை அறவே பிடிக்கவில்லை. "பொண்ணை வச்சுக்கிட்டுப் பையனுக்குக் கல்யாணம். புத்தியோடதான் சொல்றீங்களா?"

"என்னிக்கு இருந்தாலும் பண்றதுதானே. நல்ல இடம் வர்றப்ப ஏன் விடணும்?"

"சோலை சொல்றது நல்ல இடமா?"

"சரி... வேற எடந்தான் பார்க்கிறது."

"அதான் பொண்ணு இருக்காளே... வீட்டு வசதியாச்சும் வேணாமா?"

தவசுப்பிள்ளை அப்போதுதான் சுற்றிப் பார்த்தார். அளவு எடுத்த மாதிரி பத்துக்குப் பத்தில் ஓர் அறை. எட்டடியில் சமையல் கட்டு. பெண் எங்கே படுப்பாள்? தாங்கள்தான் எங்கே ஒதுங்குவது?

"அதெல்லாம் பார்த்தா முடியாது. எல்லா வசதியும் எப்பத்தான் வர்றது? அவன்கிட்ட இன்னிக்குக் கேட்டுரு..." முரட்டு அடியாக அடித்தார்.

"என்னன்னு?"

"உங்கப்பா உனக்குப் பொண்ணுப் பார்க்கச் சொல்றாருன்னு..."

"ஒத்துக்கிட்டான்னா?"

காமாட்சி அவரது முகத்தைக் கூர்ந்து பார்த்தாள். நிறைய அர்த்தம் தருகிற பார்வையாக இருந்தது அது.

"செய்துவிட வேண்டியதுதான். வேற வழி?" பார்வையைத் திருப்பிக் கொண்டே சொன்னார். "அது சரி நாயம்..." காமாட்சி தனக்குள் முணுமுணுத்தாள்.

கேட்கவும், பதில் சொல்லவும் எதுவும் இல்லாததைப் போல இருந்தது.

மணி ஒன்று அடித்தது. குமரேசன் சாப்பாட்டிற்கு வருகிற நேரம்.

"சரி பார்த்துக்கோ. நான் சித்த நாழி வெளியே போய்ட்டு வர்றேன்."

"அப்பா... சாப்பிடலையா?"

"வேணாம்மா... அண்ணன் வந்துட்டுப் போகட்டும். அப்புறம் சாப்பிடலாம்."

என்றும் இல்லாதவாறு அந்த நேரத்தில் அவர் வெளியே செல்வதிலும் ஓர் அர்த்தத்தைக் கண்டு கொண்டாள் காமாட்சி.

வீடு அமைதியாக இருந்தது.

குமரேசன் வந்து போனதற்கு அடையாளமாகச் சைக்கிள் தடயம். செருப்பை வாசலில் கழற்றி விட்டுக் கதவைத் தட்டினார்.

"ஆரு?" சீதா கதவைத் திறந்தாள்.

தரையில் படுத்திருந்த காமாட்சி எழுந்து உட்கார்ந்தாள். "எங்க போனீக... இம்புட்டு நேரமா ஆளைக் காணோம்?"

அவர் முகம் அலம்பி வர, பெண் சாப்பாட்டை வைத்தாள்.

"குமார் சாப்பிட்டானா?" அவன் வந்ததை உறுதிப்படுத்திக் கொள்கிற மாதிரி கேட்டார்.

"ம்..."

அதற்கு மேல் பேசிக் கொள்ளத்தக்க ஏதும் இல்லாத மாதிரி படுத்துக் கொண்டாள் காமாட்சி. அவருக்குக் கோபம் வந்தது. எதற்காகக் கேட்கிறான் என்று புரிந்து கொள்ளத் தெரியலையா... இந்த ஜென்மத்திற்கு?

பெயருக்குக் கொட்டிக் கொண்டு எழுந்தார்.

"இன்னும் கொஞ்சம்ப்பா..."

"போதும்மா.....

சீதாவின் முகத்திலும் எதையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. கிட்டத்தட்ட தன் உயரத்திற்கு நிற்கும் அவளைக் காண பாரம் கூடவே செய்தது. பாத்திரங்களை எடுத்துக் கொண்டு போகும் வரை காத்திருந்து, மனைவியிடம் திரும்பி, "என்னடி?" என்றார்.

"ம்?" காமாட்சி மறுபடியும் எழுந்து உட்கார –

"என்ன சொன்னான்.... கேட்டியா?"

"உங்க பேச்சைக் கேட்டேன் பாருங்க... சண்டைக்கு வர்றான்."

"சண்டையா?"

"ஆமா..." என்ற காமாட்சி கொண்டையை உதறி முடிந்து கொண்டாள். குரலையும் தணித்துக் கொண்டு, "தங்கச்சிக்குப் பண்ணி வச்சுட்டு அப்புறம்தான் அவன் பண்ணிக்குவானாம்... புத்தி கெட்டுப் போச்சான்னு கத்தறான். வாயை வச்சுக்கிட்டு இனிமேலாச்சும் பேசாம இருங்க..."

"அப்படியா?" என வாய் விட்டுக் கேட்ட தவசுப்பிள்ளை, 'நிசமாவா?' என்று மனசுக்குள்ளும் கேட்டுக் கொண்டார். உடம்பு ஒருமுறை சிலிர்த்துக் கொண்டது.

"அதானே... எம்புள்ளையைப் பத்தி எனக்குத் தெரியாதா?" என மனசு முணுமுணுக்க... கரகரவென்று கண்ணீர் சுரந்தது அவருக்கு. சிறுமைப்பட்டுப் போன தமது புத்திக்குப் பிராயச்சித்தம் போல ரொம்ப நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தார் அவர்.

---

"அரசே! நம் 'ஆயுதங்கள்' தயாரிப்பில் ஏதோ ஊழல் நடந்திருக்க வேண்டும் என்று 'தளபதி' சந்தேகிக்கிறார்...!!"

— எல். ஆர். ராஜபாஸ்கர்.



# நியுபான்

## தாயின் அரவணைப்புக்கு ஈடான சிறந்த ஜீரண டானிக்




**சிறந்த மூலிகைகளைக் கொண்டு குழந்தைகளுக்காகத் தயாரிக்கப்பட்ட ஜீரண டானிக். பாதுகாப்பானது.**






குழந்தை பசியின்மை, வயிற்று வலி, விக்கல், வயிற்றுப் பொருமல், எதுக்களித்தல், மலபந்தம், பேதி முதலியவைகளால் பாதிக்கப்படலாம். இதனால் தேவையற்ற அழுகை, அமைதியற்ற தன்மை, தூக்கமின்மை ஆகியவையும் மற்றும் ஜலதோஷம், இருமல் ஆகியவையும் ஏற்படக்கூடும். அனுபவமிக்க தாய்மார்கள் பன்னெடுங்காலமாகத் தங்கள் குழந்தைகளின் ஜீரண சக்தியை வலுப்படுத்தவும், உடல் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கவும் உபயோகித்து நல்ல பலன் கண்ட சிறந்த மூலிகைகளான ஓமம், வசம்பு, சிற்றரத்தை, அதிமதுரம், திப்பிலி, கடுக்காய், ஏலக்காய் ஆகியவைகள் தேவையான அளவு நியுபானில் சேர்க்கப்பட்டுள்ளன. குழந்தை முழுமையான ஆரோக்கியத்துடனும், புஷ்டியாகவும் வளர விரும்பிச் சாப்பிடக்கூடிய ஜீரண டானிக்கான நியுபான் அவசியம் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டியது.தொடர்ந்து கொடுத்து நல்ல பலன் காணவும்.

**ஆல்கஹால், போதைப் பொருட்கள், சோடியம்- பை-கார்பனேட் கலப்பு இல்லாதது.**




'விஜய்', மருத்துவக் கல்லூரி சாலை, தஞ்சாவூர் - 613 007, தமிழ்நாடு.
தொலைபேசி எண் : 22025/22225 டெலக்ஸ் : 0468-205 PPPL IN

**மருந்துக் கடைகளிலும், ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.**

SOBHAGYA

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 12
## தூமகேது மறைந்தது!

ஒரு நேரத்துக்கு அப்பால் பழுவேட்டரையருக்குச் சிறிது நினைவு வந்த போது, அவர் ஒரு பயங்கரமான போர்க்களத்தில் இருப்பதைக் கண்டார். வாள்கள் ஒன்றோடொன்று மோதி ஜண ஜணவென்று ஓங்கார ஒலி கிளப்பின. ஒரு பக்கத்தில் ஜய பேரிகைகள் முழங்கிக் கொண்டிருந்தன. அவற்றுடன் சேர்ந்து ஆயிரக் கணக்கான குரல்கள் "மகா ராஜாதிராஜ பாண்டிய மன்னர் வாழ்க! பாண்டிய விரோதிகள் வீழ்க!" என்று கோஷமிட்டன. இன்னொரு பக்கத்தில் ஆயிரக்கணக்கான குரல்கள் "கங்க மன்னன் விழுந்து விட்டான்! ஓடுங்கள்! ஓடுங்கள்!" என்று கூக்குரலிட்டன. ஓடுகிறவர்களைத் தடுத்து நிறுத்தும் குரல்கள் சிலவும் கேட்டன.

அப்போது திடீரென்று ஒரு கணம் போர்க்களத்தில் நிச்சப்தம் நிலவியது. பழுவேட்டரையர் சுற்றுமுற்றும் பார்த்தார். இரண்டு கால்களையும் இழந்த விஜயாலய சோழனை இன்னொரு நெடிதுயர்ந்த ஆஜானுபாகுவான மனிதன் தன் தோள்களிலே தூக்கிக் கொண்டு வந்தான். தோள்மீது அமர்ந்திருந்தவன் இரண்டு கரங்களிலும் இரண்டு ராட்சத வாள்களை ஏந்திக் கொண்டிருந்தான். "சோழ வீரர்களே! நில்லுங்கள்! பல்லவர்களே! ஓடாதீர்கள்! ஆறிலும் சாவு! நூறிலும் சாவு! என்னைப் பின் தொடர்ந்து வாருங்கள்! எதிரிகளைச் சின்னா பின்னம் செய்வோம்!" என்று அவன் கோஷித்தான். ஓடத் தொடங்கியிருந்த சோழ – பல்லவ வீரர்கள் விஜயாலய சோழனைப் பார்த்து விட்டு, அவன் வார்த்தைகளைக் கேட்டு விட்டு நின்றார்கள். அவர்களுடைய முகங்களிலே சோர்வும் பீதியும் நீங்கி மீண்டும் தீரமும் வீரக் களையும் தோன்றின. பின் வாங்கியவர்கள் முன்னேறத் தொடங்கினார்கள். இந்த அதிசய மாறுதலுக்குக் காரணமாயிருந்த விஜயாலய சோழனை மீண்டும் பழுவேட்டரையர் பார்த்தார். அவனைத் தோளிலே தாங்கிக் கொண்டிருந்த வீரனையும் பார்த்தார். அதிசயம்! அதிசயம்! அப்படித் தாங்கிக் கொண்டு நின்ற வீரன் தாமேதான் என்பதைக் கண்டார். அந்தப் பழுவேட்டரையர் ஒரு கையால் தம் தோளின் மீதிருந்த இருகாலும் இல்லாத விஜயாலய சோழனைப் பிடித்துக் கொண்டு இன்னொரு கையில் பிடித்திருந்த நீண்ட கத்தியைச் சுழற்றிக் கொண்டே எதிரிகளிடையே புகுந்தார். அவர்கள் இருவரும் போன இடமெல்லாம் பாண்டிய வீரர்களின் தலைகள் தரையில் உருண்டு விழுந்தன.

போர் நிலைமை அடியோடு மாறி விட்டது. பாண்டிய சைனியம் சிதறி ஓடியது. சோழ பல்லவர்கள் வென்றார்கள். எட்டுத் திக்கும் அதிரும்படி ஜயபேரிகைகள் முழங்கின. பல்லவ சக்கரவர்த்திக்கு முன்னால் விஜயாலய சோழர் அமர்ந்திருந்தார்! அவருக்கு அருகில் பழுவேட்டரையர் நின்றார்.

**அமரர் கல்கி**

பல்லவ சக்கரவர்த்தி சோழ மன்னரைப் பார்த்து, "வீராதி வீரரே! உம்மாலே இன்று தோல்வி வெற்றியாயிற்று! இனிச் சோழ நாடு சுதந்திர நாடு! நீரும் உமது வீரப் புதல்வன் ஆதித்தனும் உங்கள் சந்ததிகளும் என்றென்றும் சுதந்திர மன்னர்களாகச் சோழ நாட்டை ஆளுவீர்கள்!" என்றார். உடனே விஜயாலய சோழர் தமக்கருகில் நின்ற பழுவேட்டரையரைப் பார்த்து, "அத்தான்! தங்களாலேதான் இந்த வெற்றி நமக்குக் கிட்டியது. சுதந்திர சோழ நாட்டின் சேநாதிபதியாகவும் தனாதிகாரியாகவும் உம்மை நியமிக்கிறேன். உமது சந்ததிகளும் சோழ குலத்துக்கு உண்மையாயிருக்கும் வரையில் தனாதிகாரிகளாகவும் சேநாதிபதிகளாகவும் இருப்பார்கள்!" என்றார். பழுவேட்டரையரின் காயங்கள் நிறைந்த முகம் பெருமிதத்தால் மலர்ந்தது.

திடீரென்று அந்த முகத்தில் கடுங்கோபம் தோன்றியது. அந்தப் பழைய பழுவேட்டரையர் இந்தப் புதிய பழுவேட்டரையரைப் பார்த்தார். "அட பாவி! துரோகி! சண்டாளா! என் குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பே! ஆறு தலைமுறையாகச் சேர்த்த அருமையான வீரப் புகழையெல்லாம் நாசமாக்கிக் கொண்டாயே? சிநேகிதத் துரோகமும் எஜமானத் துரோகமும் செய்தாயே? சோழ குலத்தின் பரம்பரைப் பகைவர்களுக்கு உன்னுடைய வீட்டிலே இடங் கொடுத்தாயே? உன்னுடைய பொக்கிஷத்திலிருந்து பொருள் கொடுத்தாயே? உன்னால் அல்லவோ இன்று சோழ குலத்துக்கு இறுதி நேரப் போகிறது! நீ நாசமாய்ப் போவாய்! உனக்கும் உன் குலத்துக்கும் உன்னால் உற்ற பழி உலகம் உள்ள அளவும் மாறவே மாறாது!" என்று சபித்தார். சபித்த பழுவேட்டரையரின் கண்களில் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது.

பிறகு மற்றும் பல பழுவேட்டரையர்கள் வந்தார்கள். ஒவ்வொருவரும் தாம் தாம் செய்த வீரச் செயல்களைக் கூறினார்கள். ஒவ்வொருவரும் பழுவேட்டரையரைச் சபித்தார்கள். பின்னர் எல்லாரும் சேர்ந்து சபித்தார்கள். "சண்டாளா! குலத் துரோகமும் இராஜத் துரோகமும் செய்து விட்டாயே? நாங்கள் உயிரைக் கொடுத்துச் சம்பாதித்த வீரப் புகழையெல்லாம் நாசமாக்கி விட்டாயே! உன் புத்தி ஏன் இப்படிப் போயிற்று?" என்றார்கள்.

பழுவேட்டரையர்கள் மறைந்தார்கள். கொடும்பாளூர் வேளிர்களும் திருக்கோவலூர் மலையமான்களும் வந்தார்கள். தன்னந்தனியே நின்ற பழுவேட்டரையரைச் சூழ்ந்து கொண்டார்கள். "சீச்சீ! நீயும் ஒரு மனிதனா? சோழர் குலத்தை நீயும் உன் பரம்பரையுந்தான் தாங்கி வந்தது என்று பெருமை அடித்துக் கொண்டாயே? இப்போது என்ன சொல்லுகிறாய்? சோழ குலத்துக்கு நீ யமனாக மாறி விட்டாயே? பாதகா! உன் பவிஷு எங்கே?" என்று கூறி எக்காளம் கொட்டிச் சிரித்தார்கள்.

அவர்களுக்குப் பின்னால் கூட்டமாக நின்ற சோழ நாட்டு மக்கள் கல்லையும் மண்ணையும் வாரிப் பழுவேட்டரையர் மீது எறியத் தொடங்கினார்கள். அச்சமயம் சுந்தர சோழ சக்கரவர்த்தி அந்தக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு பலமற்ற கால்களினால் தள்ளாடி நடந்து வந்தார். வேளிர்களையும் மலையமான்களையும் மற்றவர்களையும் கோபமாகப் பார்த்தார். "சீச்சீ! என்ன காரியம் செய்கிறீர்கள்? வீராதி வீரரான பழுவேட்டரையர் மீதா கல்லையும் மண்ணையும் எறிகிறீர்கள்? அவரையா துரோகி என்கிறீர்கள்? பழுவேட்டரையரின் துரோகத்தினால் நானும் என் குலமும் அழிந்து போனாலும் போகிறோம். நீங்கள் யாரும் அவரைக் குற்றம் சொல்ல வேண்டாம்! தனாதிகாரி! வாரும் என்னுடன் அரண்மனைக்கு!" என்றார். ஜனக் கூட்டம் கலைந்து போயிற்று. சுந்தர சோழரும் மறைந்தார். தம்பி காலாந்தக கண்டர் மட்டும் பழுவேட்டரையர் முன்னால் நின்றார். "அண்ணா! நம்மிடம் இவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாரே சக்கரவர்த்தி! அவருக்குத் துரோகம் செய்யலாமா? அவருடைய குலத்தை அழிக்க வந்த பெண் பேயை நம் அரண்மனையில் வைத்துக் கொண்டிருக்கலாமா?" என்றார். உடனே அவரும் மறைந்தார்.

வந்தியத்தேவனும் கந்தமாறனும் அவர்களையொத்த வாலிபர்களும் பெரிய பழுவேட்டரையரைச் சூழ்ந்து கொண்டார்கள். "மீசை நரைத்த கிழவா! உனக்கு ஆசை மட்டும் நரைக்கவில்லையே? பெண் மோகத்தினால் அழிந்து போனாயே? உன் உடம்பிலுள்ள அறுபத்து நாலு புண்களும் இப்போது என்ன சொல்லுகின்றன? அவை வீரத்தின் பரிசான விழுப் புண்களா? அல்லது துரோகத்தின் கூலியான புழுப் புண்களா?" என்று கேட்டுவிட்டுக் கலகல வென்று சிரித்தார்கள். அவர்களைக் கொல்லுவதற்காகப் பழுவேட்டரையர் தம் உடை வாளை எடுக்க முயன்றார். ஆனால் உடைவாள் இருக்க வேண்டிய இடத்தில் அதைக் காணவில்லை.


ச்சமயத்தில் குந்தவைப் பிராட்டி வந்தாள். வாலிபர்களை நோக்கிக் கையமர்த்திச் சிரிப்பை நிறுத்தினாள்.

"பாட்டா! இவர்களுடைய விளையாட்டுப் பேச்சைத் தாங்

கள் பொருட்படுத்த வேண்டாம். தங்கள் அரண்மனையில் உள்ள பெண் வேடங் கொண்ட விஷப் பாம்பைத் துரத்தி விடுங்கள்! எல்லாம் சரியாகி விடும்!'' என்றாள்.

அவர்கள் மறைந்தார்கள். பழுவேட்டரையர் குலத்தைச் சேர்ந்த பெண்கள் வரத் தொடங்கினார்கள். பத்துப் பேர், நூறு பேர், ஆயிரம் பேர், ஆறு தலை முறையைச் சேர்ந்தவர்கள் வந்து, அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். ''ஐயையோ! உனக்கு இந்தக் கதியா நேரவேண்டும்! நம்முடைய வீரக் குலத்துக்கு உன்னால் இந்தப் பெரும் பழியா ஏற்பட வேண்டும்! நாங்கள் எங்கள் கணவன்மார்களையும் அண்ணன் மார்களையும் தம்பி மார்களையும் பத்து மாதம் சுமந்து பெற்ற பிள்ளைகளையும் சோழ நாட்டுக்காகப் போர்க்களத்துக்கு அனுப்பி வைத்தோமே? அவர்கள் இரத்தம் சிந்தி உயிரைக் கொடுத்துப் பழுவூர் வம்சத்துக்கு இணையில்லாப் புகழைத் தேடித் தந்தார்களே? அதையெல்லாம் ஒரு நொடியில் போக்கடித்துக் கொண்டாயே?'' என்று கதறினார்கள்.

''பெண்களே! வாயை மூடிக் கொண்டு அந்தப் புரத்துக்குப் போங்கள். என்னால் ஒரு பழியும் உண்டாகாது!'' என்று பழுவேட்டரையர் கஷ்டப்பட்டுப் பதில் கூறினார். அப்போது அந்தப் பெண்கள் ஒரு திசையில் சுட்டிக் காட்டினார்கள். யமதர்மராஜன் எருமைக்கடா வாகனத்தில் ஏறிக்கொண்டு கையில் வேலும் பாசக் கயிறும் எடுத்துக் கொண்டு வந்தான். பழுவேட்டரையரை நெருங்கினான். போகிற போக்கில், ''பழுவேட்டரையா! உனக்கு மிக்க வந்தனம்! சுந்தரசோழனுடையஉயிரையும்அவனுடைய மக்கள் இருவர் உயிரையும்ஒரே நாளில் கொண்டு போக உதவி செய்தாய் அல்லவா? உனக்கு என் நன்றி!'' என்று கூறினான் யமதர்ம ராஜன்.

''இல்லை, இல்லை! நான் உனக்கு உதவி செய்யவில்லை; செய்ய மாட்டேன்! உன்னைத் தடுப்பேன்! யமனே! நில்! நில்!'' என்று பழுவேட்டரையர் அலறினார். யமனைத் தடுத்து நிறுத்துவதற்காக விரைந்து செல்ல முயன்றார். ஆனால் அவரை ஏதோ ஒரு சக்தி பிடித்து நிறுத்தியது. ஏதோ ஒரு பெரிய பாரம் அவரை அமுக்கியது. நின்ற இடத்திலிருந்து அவரால் நகர முடியவில்லை.

''பார்த்தாயா! நாங்கள் சொன்னது சரியாய்ப் போய் விட்டதே!'' என்று கூறிவிட்டுப் பழுவேட்டரையர் குலப் பெண்கள் ஓ வென்று சத்தமிட்டுப் புலம்பினார்கள். அவர்களில் பலர் ஒப்பாரி வைத்து அழுதார்கள்.

அவர்களுடைய அழுகுரலின் சத்தம் நிமிடத்துக்கு நிமிடம் அதிகமாகி வந்தது. பழுவேட்டரையரால் அதைச் சகிக்க முடியவில்லை. அவர் பேச முயன்றார்; ஆனால் அழுகைச் சத்தத்தில் அவர் பேச்சு மறைந்து விட்டது.

அழுகையையும் புலம்பலையும் கேட்கச் சகிக்கவில்லை. இரண்டு கைகளினாலும் செவிகளைப் பொத்திக் கொள்ள முயன்றார். ஆனால் அவருடைய கைகளும் அசைவற்றுக் கிடந்தன. அவற்றை எடுக்கவே முடியவில்லை.



ரு பெரு முயற்சி செய்து கரங்களை உதறி எடுத்தார். அந்த முயற்சியிலே அவருடைய கண்ணிமைகளும் திறந்து கொண்டன. சட்டென்று நினைவு வந்தது. அத்தனை நேரமும் அவர் அநுபவித்தவை மனப் பிரமையில் கண்ட காட்சிகள் என்பதை உணர்ந்தார். ஆனால் ஓலக் குரல் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது. சற்றுக் கவனித்துக் கேட்டார். அவை பெண்களின் ஓலக் குரல் அல்ல; நரிகளின் ஊளைக் குரல்!

அவர் நினைவு இழந்து கொண்டிருந்த சமயத்தில் இலேசாகக் காதில் விழுந்த சம்பாஷணை ஞாபகத்துக்கு வந்தது.

''கிழவன் செத்துப் போய் விட்டான்!'' என்றது ஒரு குரல்.

''நன்றாகப் பார்! பழுவேட்டரையருடைய உயிர் ரொம்பக் கெட்டி. யமன் கூட அவன் அருகில் வரப் பயப்படுவான்!'' என்றது மற்றொரு குரல்.

''யமன் பயப்பட்டாலும் நரி பயப்படாது. கொஞ்ச நஞ்சம் உயிர் மிச்சமிருந்தாலும் நரிகள் சரிப்படுத்திவிடும். பொழுது விடியும்போது கிழவனின் எலும்புகள்தான் மிச்சமிருக்கும்!''

''நல்ல சமயத்தில் நீ பிளந்த மண்டபத்தைத் தள்ளினாய். இல்லாவிடில் நான் அந்தக் கதியை அடைந்திருப்பேன். கிழவன் என்னைக் கொன்றிருப்பான்!''

''எங்கே? மண்டபத்தை நகர்த்த முடியுமா, பார்க்கலாம்!''

சற்றுப் பொறுத்து, ''துளிக்கூட அசையவில்லை! ஒரு பகைவனுடைய பள்ளிப் படையைக் கொண்டு இன்னொருவனுக்கும் வீரக் கல் நாட்டி விட்டோம்'' என்று கூறிவிட்டு மந்திரவாதி கலகல வென்று சிரித்தான்.

''சிரித்தது போதும், வா! படகு பிய்த்துக் கொண்டு ஆற்றோடு போய் விடப் போகிறது. அப்புறம் கொள்ளிடத்தைத் தாண்ட முடியாது!''


ந்த வார்த்தைகளை ஞாபகப் படுத்திக் கொண்டு பழுவேட்டரையர் தம்முடைய நிலை இன்னதென்பதை ஆராய்ந்தார். ஆம்; அவர் மீது பள்ளிப்படை மண்டபத்தின் ஒரு பாதி விழுந்து கிடந்தது. அதன் பெரிய பாரம் அவரை அமுக்கிக் கொண்டிருந்தது.



ஆனால் மூச்சுவிட முடிகிறது, எப்படி?

நல்ல வேளையாக, மண்டபத்தோடு விழுந்த மரம் அவர் தோளின்மீது படிந்து அதன்பேரில் மண்டபம் விழுந்திருந்தது. மண்டபத்தையொட்டியிருந்த மரந்தான் அவர் உயிரைக் காப்பாற்றியது. மண்டபம் நேரே அவர் மேல் விழுந்திருந்தால் மார்பும் தலையும் நொறுங்கிப் போயிருக்கும்.

கிழவனார் தம்முடைய உடம்பின் வலிமையை எண்ணித் தாமே ஆச்சரியப்பட்டார். அந்தப் பெரிய பாரத்தை இத்தனை நேரம் சுமந்தும் தம்முடைய உயிர் போகவில்லையென்பதை உணர்ந்து கொண்டார். ஆனால் இவ்வளவு கெட்டியான உயிரை இன்னமும் காப்பாற்றிக் கொள்ள முடியுமா?

ஆம்; எப்படியாவது காப்பாற்றிக் கொண்டேயாக வேண்டும். காப்பாற்றிக் கொண்டு சோழ குலத்துக்கு நேரவிருந்த அபாயத்தைத் தடுக்க வேண்டும். அப்படித் தடுக்காவிட்டால் அவருடைய குலத்துக்கு என்றும் அழியாத பழி இவ்வுலகில் ஏற்படுவது நிச்சயம். வானுலகத்துக்குப் போனால் அங்கேயும் அவருடைய மூதாதையர்கள் அனைவரும் அவரைச் சபிப்பார்கள். ஆகையால், எந்தப் பாடு பட்டாவது இந்த மரத்தையும் மண்டபத்தையும் அப்புறப்படுத்தி எழுந்திருக்க வேண்டும். ஐயோ! எத்தனை நேரம் இங்கே இப்படி நினைவு இழந்து கிடந்தோமோ என்னமோ தெரியவில்லையே! இதற்குள் ஒருவேளை நாம் தடுக்க விரும்பும் விபரீதங்கள் நேரிட்டிருக்குமோ?

இதற்கிடையில் நரிகளின் ஊளைக் குரல் நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருந்தது. நரிகள் மூச்சு விடும் சத்தம் அவர் தலைக்கு அருகில் கேட்டது! ஆகா! இந்த நரிகளுக்குக் கூடவா பழுவேட்டரையனைக் கண்டு இளக்காரமாகப் போய் விட்டது? பார்க்கலாம் ஒரு கை!

பழுவேட்டரையர் ஒரு கையினால் மட்டும் அல்ல, இரண்டு கைகளினாலும் பார்க்கத் தொடங்கினார். தம் உடம்பில் மிச்சமிருந்த பலம் முழுவதையும் பிரயோகித்து அவர்மீது விழுந்து கிடந்த மரத்தைத் தூக்க முயன்றார். மரம் சிறிது சிறிதாக உயர, உயர அதன்மேல் நின்ற மண்டபப் பாறை நகர்ந்து சரியத் தொடங்கியது. இடையிடையே அவர் செய்த ஹூங்காரங்கள் நெருங்கி வந்த நரிகளை அப்பால் நகரும்படி செய்தன.

ஒரு யுகம் எனத் தோன்றிய ஒரு நாழிகை முயன்ற பிறகு அவரை அமுக்கிக் கொண்டிருந்த மரமும் மண்டபப் பாறையும் சிறிது அப்பால் நகர்ந்து அவரை விடுதலை செய்தன.

அந்த முயற்சியினால் அவருக்கு ஏற்பட்ட சிரமங்காரணமாகச் சிறிது நேரம் அப்படியே கிடந்தார். பெரிய நெடு மூச்சுகள் விட்டார்.

ஆகாசத்தை அண்ணாந்து பார்த்தார். மண்டபத்துக்குச் சமீபமாதலாலும் புயலில் மரங்கள் பல விழுந்து விட்டிருந்த படியாலும் வான வெளி நன்றாகத் தெரிந்தது. இப்போது கரு மேகங்கள் வானத்தை மறைத்திருக்கவில்லை. வைரப் பொறிகள் போன்ற எண்ணற்ற நட்சத்திரங்கள் தெரிந்தன. இலேசான மேகங்கள் அவற்றைச் சிறிது மறைத்தும் பின்னர் திறந்து விட்டும் அதிவேகமாகக் கலைந்து போய்க் கொண்டிருந்தன.

சட்டென்று வானத்தில் வட திசையில் தோன்றிய ஒரு விசித்திரமான நட்சத்திரம் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அடடா! சில நாளைக்கு முன்பு அவ்வளவு நீளமான வாலைப் பெற்றிருந்த தூமகேதுவா இப்போது இவ்வளவு குறுகிப் போயிருக்கிறது? அந்த நட்சத்திரத்தின் ஒரு முனையில் சுமார் ஒரு அடி நீளம் வெளிறிய புகைத் திரள் போல நீண்டிருந்தது. பத்து நாளைக்கு முன்பு கூட வானத்தின் ஒரு கோணம் முழுதும் நீண்டிருந்த வால் இப்படிக் குறுகி விட்ட காரணம் என்ன?...

வானத்திலிருந்து பார்வையை அகற்றிச் சுற்று முற்றும் பார்த்தார். நரிகள் இன்னும்

போகவில்லையென்பதைக் கண்டார்! பத்து, இருபது, — ஐம்பது நரிகள் இருக்கும். அவற்றின் கண்கள் நெருப்புத் தணல்களைப் போல் காட்டின் இருளில் ஜொலித்துக் கொண்டிருந்தன. கிழவன் எப்போது சாகப் போகிறான் என்று காத்துக் கொண்டிருந்தன போலும்! போகட்டும்! அவ்வளவு மரியாதையாவது பழுவேட்டரையனிடம் இந்த நரிகள் காட்டுகின்றனவே!......

திடீரென்று வானமும் பூமியும் அந்த வனப்பிரதேசம் முழுதும் ஒளி மயமாயிற்று. பழுவேட்டரையரின் கண்கள் கூசின. அது மின்னல் அல்ல. வேறு என்னவாயிருக்கக் கூடும்? வானத்தை நோக்கினார். ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்த ஒரு தீப் பந்தம் வான வட்டத்திலே ஒரு கோணத்தில் பிரயாணம் செய்து கொண்டிருக்கக் கண்டார். அதன் பிரகாசம் அவருடைய கண்களைக் கூசச் செய்தது. கண்ணை ஒரு கணம் மூடி விட்டுப் பிறகு திறந்து பார்த்தார். அந்தத் தீப் பந்தம் சிறிதாகிப் போயிருந்தது; வர வர ஒளி குறைந்து வந்தது; திடீரென்று அது மறைந்தே விட்டது. பழைய படி இருள் சூழ்ந்தது.

இந்த அதிசயம் என்னவாயிருக்கும் என்று பழுவேட்டரையர் சிந்தித்துக் கொண்டே மீண்டும்வானத்தைநோக்கினார். குறுகிய தூமகேது சற்று முன் இருந்த இடத்தைப் பார்த்தார். அங்கே அதைக் காணவில்லை.. ஆகா! தூமகேது தான் விழுந்து விட்டது! இதன் கருத்து என்ன? இதன் விளைவு என்ன! உலகத்தில் ஏதேனும் விபரீதம் நடக்கப் போவதற்கு அறிகுறிதான். இராஜ குடும்பத்தினர் யாருக்காவது விபத்து நேரிடுவதற்கு அடையாளம். வால் நட்சத்திரம் மறையும் போது அரச குலத்தைச் சேர்ந்த யாரேனும் மரணம் அடைவார்கள். — இது வெகுகாலமாக மக்களிடையே பரவியிருக்கும் நம்பிக்கை. அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது என்று சொல்லுவோரும் உண்டு. அதன் உண்மையும் பொய்மையும் நாளைக்குத் தெரிந்து விடும். நாளைக்கா? இல்லை! இன்றைக்கே தெரிந்து போய் விடும்...! அதோ கீழ் வானம் வெளுத்து விட்டது! பொழுது புலரப் போகிறது! இன்று இரவுக்குள் மூன்று இடங்களில் மூன்று விபரீத பயங்கர நிகழ்ச்சிகள் நடைபெறக் கூடும். அவை நடக்கப் போகும் விவரம் நமக்கு மட்டும் தெரியும். அவற்றைத் தடுக்கும் சக்தியும் நமக்குத்தான் உண்டு. தடுப்பதில் வெற்றி பெற்றால் தூமகேது விழுந்த அபசகுனத்தைக் கூட வெற்றி கொண்டதாகும். இல்லாவிடில்... அதைப் பற்றி எண்ணவே பழுவேட்டரையரால் முடியவில்லை. தடுத்தேயாக வேண்டும்! சோழர் குலத்தைச் சேர்ந்த மூவரையும் காப்பாற்றியேயாக வேண்டும்.

தமது முதல் கடமை, மிக முக்கிய மான கடமை ஆதித்த கரிகாலனைக் காப்பாற்றுவதுதான்! அவனுக்கு விபத்து வந்தால் அதன் பழி தன் தலையில் நேராக விழும். ஆகையால் கொள்ளிடத்தைத் தாண்டிக் கடம்பூருக்கு உடனே போய்ச் சேர வேண்டும். அதற்கு முன்னால், குடந்தைக்குச் சென்று தஞ்சைக்கும் நாகைக்கும் எச்சரிக்கை அனுப்பிவிட்டுப் போவது நல்லது. பின்னர், விதிவசம் போல் நடந்துவிட்டுப்



போகிறது. தாம் செய்யக் கூடியது அவ்வளவுதான்!

பழுவேட்டரையர் எழுந்திருக்க முயன்றார். உடம்பெல்லாம் ரணமாக வலித்தது. மரம் விழுந்திருந்த இடம் மார்பில் பொறுக்க முடியாத வேதனையை உண்டாக்கிற்று. ஒரு கால் முறிந்து விட்டது போல் தோன்றியது. தேகம் முழுதும் பல்வேறு காயங்கள் பட்டிருந்தன.

அவற்றையெல்லாம் அந்த வீரக் கிழவர் பொருட்படுத்தவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு பெரு முயற்சி செய்து எழுந்து நின்றார். சுற்று முற்றும் பார்த்தார். நல்ல வேளையாக, அவருடைய மரணத்துக்காகக் காத்திருந்த நரிகள் அதற்குள் ஓடிப்போய் விட்டிருந்தன. தூமகேது விழுந்தபோது உண்டான ஒளி வெள்ளத்தைக் கண்டு மிரண்டு அவை ஓடிப் போயின போலும்!

குடந்தை நகரம் அங்கிருந்து எந்தத் திசையில் இருக்கலாம் என்பதை ஒருவாறு நிர்ணயித்துக் கொண்டு புறப்பட்டார். திடமாகக் கால்களை ஊன்றி வைத்து நடக்கத் தொடங்கினார்.

வழியெல்லாம் புயல் அடித்து மரங்கள் விழுந்து கிடந்தன. பெரு மழையினாலும் கொள்ளிடத்து உடைப்பினாலும் வெள்ளக் காடாக இருந்தது. இந்த இடையூறுகளையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் பழுவேட்டரையர் நடந்தார். உள்ளத்தின் கொந்தளிப்பு உடலின் சிரமங்களையெல்லாம் மறந்து விடச் செய்தது. ஆனாலும் நேரம் போய்க் கொண்டே இருந்தது. பொழுது விடிந்து இரண்டு ஜாம நேரம் ஆன சமயத்தில் குடந்தை நகரை அவர் அணுகினார். அந்த மாநகரின் மத்தியப் பிரதேசத்துக்குப் போக அவர் விரும்பவில்லை. அவரை இந்தக் கோலத்தில் பார்த்தால் ஜனங்கள் வந்து சூழ்ந்து கொள்வார்கள். என்ன, ஏது என்று கேட்பார்கள். அவர் செய்ய விரும்பிய காரியத்தைத் துரிதமாகவும் திறமையாகவும் செய்ய முடியாமற் போய்விடும்.

ஆகையினால் நகரின் முனையிலேயே, ஜன நெருக்கமில்லாத இடத்தில், யாரையாவது பிடித்து, தஞ்சைக்கும் நாகைக்கும் ஓலை அனுப்ப அவண்டும். பிறகு ஒரு வாகனம் சம்பாதித்துக் கொண்டு கடம்பூருக்குக் கிளம்ப வேண்டும்.

துர்க்கை அம்மன் கோவிலுக்கு அருகிலுள்ள ஜோதிடரின் ஞாபகம் அவருக்கு வந்தது. ஆம்; அது தனிப்பட்ட பிரதேசம். அக்கம் பக்கத்தில் வேறு வீடுகள் இல்லை. ஜோதிடர் தகுந்த மனிதர்; இயல்பு படைத்த மனிதர். இராஜ குடும்பத்துக்கும் முதன் மந்திரிக்கும் வேண்டியவர். அதனால் என்ன? யாராயிருந்தாலும் இந்தக் காரியத்தைச் செய்வார்கள். இராஜ குடும்பத்துக்கு வேண்டியவராக இருப்பதால் இன்னும் ஆர்வத்துடன் செய்வார். ஆகா! ஜோதிடருக்கு உண்மையில் ஜோதிடம் தெரியுமா, ஜோதிட சாஸ்திரத்தில் உண்மை உண்டா என்பதையும் இச்சமயத்தில் பரிசோதித்துப் பார்த்து விடலாம்.

அம்மன் கோவிலையும் ஜோதிடர் வீட்டையும் பழுவேட்டரையர் அணுகிச் சென்றார். கோவிலுக்கு முன்னாலிருந்த நெடிய பெரிய மரம் புயலில் முறிந்து விழுந்து கிடந்தது முதலில் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அடுத்தாற் போல் கோவிலை அடுத்து நின்ற இரட்டைக் குதிரை பூட்டிய ரதத்தின் பேரில் அவருடைய பார்வை விழுந்தது. அது விசித்திரமான அமைப்புள்ள ரதம். அந்த ரதத்தின் மேற்பகுதி ஓர் ஓடத்தைப்போல் அமைந்திருந்தது. வெள்ளம் வரும் காலங்களில் அவசரமாகப் பிரயாணம் செய்ய நேர்ந்தால் இம்மாதிரி ரதங்களை உபயோகப் படுத்துவார்கள். பெரிய நதிகளைக் கடக்கும்போது திடீரென்று நதியில் வெள்ளம் அதிகமாகி விட்டால் ஓடத்தை ரதத்திலிருந்து தனியாகக் கழற்றி விடலாம். குதிரைகளை அவிழ்த்து விட்டால் அவை நீந்திப் போய்க் கரை ஏறி விடும். ரதத்தில் வந்தவர்கள் ஓடத்தைத் தள்ளிக் கொண்டு போய்க் கரை சேரலாம்.

இத்தகைய ரதங்கள் சோழ நாட்டில் அபூர்வமாகத்தான் உண்டு. இது யாருடைய ரதமாயிருக்கும்? அரண்மனை ரதமாக இருக்க வேண்டும்; அல்லது முதன் மந்திரியின் ரதமாக இருக்க வேண்டும். இதில் வந்தவர்கள் இப்போது ஜோதிடர் வீட்டுக்குள் ஜோதிடம் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் போலும்! அவர்கள் யாராக இருக்கும்? ரதசாரதியைக் கேட்கலாமா? வேண்டாம்!

---

வந்தவர்: "இதுக்கு மேல லஞ்சம் தர என் கிட்டப் பணம் இல்லைங்க. இந்தப் பணமே என் மனைவி சேமிச்சு வச்சது தான்..."

கிளார்க்: "நோட்டில பெருங்காய வாசனை வந்தபோதே நினைச்சேன்!"

— எஸ். ஷெந்தில்.





கோகுலம்
ஆகஸ்டு
இதழில்
16 பக்க
வண்ணப்
படக்கதை
கதை:
ஆனந்தி
படம்:
விஜய

# அரிச்சந்திரன்

அவன் தம்மைப் பார்த்து மிரண்டு போனாலும் போவான். ஜோதிடர் வீட்டுக்குள் நேரே பிரவேசித்துப் பார்த்து விடுவதே நலம். அங்கே வந்திருப்பவர்கள் யாராயிருந்தாலும், இந்த ரதத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டால், கடம்பூர் திரும்பிச் செல்ல வசதியாக இருக்கும் அல்லவா?

ஜோதிடர் வீட்டு வாசலுக்குப் பழுவேட்டரையர் வந்தபோது உள்ளே பெண் குரல்கள் கேட்டன. கிழவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. யாருடைய குரல்? ஏன்? இளையபிராட்டி குந்தவையின் குரல்போல அல்லவா இருக்கிறது? அவள் எதற்காக இங்கே வந்தாள்? இந்தச் சமயம் பார்த்தா வர வேண்டும்?.... முதலில் இப்படி எண்ணியவர் உடனே மனத்தை மாற்றிக் கொண்டார். அவ்விதமானால், இளையபிராட்டியாக இருந்தால், ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. குந்தவை தேவியின் காதில் விஷயத்தைப் போட்டு விட்டால் தம்முடைய பாரமே நீங்கியது போலாகும். அவளுடைய தந்தைக்கும் தம்பிக்கும் நிகழக் கூடிய ஆபத்தைப் பற்றிக் குறிப்பாகச் சொல்லி விட்டால் பிறகு அந்த சாமர்த்தியசாலியான பெண் வேண்டிய முன் ஜாக்கிரதை எடுத்துக் கொள்வாள். பிறகு தாம் நிம்மதியாகத் திரும்பிக் கடம்பூருக்குப் போகலாம். அங்கேயல்லவா தம்முடைய முக்கியமான கடமை இருக்கிறது?

பழுவேட்டரையர் ஜோதிடர் வீட்டு வாசலில் பிரவேசித்தபோது, முன்னொரு தடவை நாம் பார்த்திருக்கும் அதே காவல்காரன், — ஜோதிடரின் சீடன் — அவரைத் தடுத்து நிறுத்தினான். பழுவேட்டரையர் அப்போதிருந்த கோலத்தில் அவரை அவனால் அடையாளங் கண்டு கொள்ள முடியவில்லை. ஆகையினாலேயே "நில்!" என்று அதட்டும் குரலில் கூறிவிட்டுத் தடுத்தான். பழுவேட்டரையர் ஒருமுறை ஹுங்காரம் செய்து விட்டு அவன் கழுத்தைப் பிடித்துத் தள்ளினார். சீடன் குட்டிக்கரணம் அடித்துக் கொண்டு போய் வீதியில் விழுந்தான். பழுவேட்டரையர் மதயானையைப் போல் பூமி அதிர நடந்து ஜோதிடரின் வீட்டுக்குள் புகுந்தார்.

(தொடரும்)

"இந்தக் கடியாரம் அழகாயிருக்கு."

ஒரு விள்ளல் தோசையை வாயில் போட இருந்தவன் சட்டென்று தலைநிமிர்ந்து அப்பாவைப் பார்த்தேன். அப்பாவின் கண்களில் ஏக்கம். பார்க்கப் பார்க்கத் தாகம் தீராது என்பது போல் அண்ணாந்து அந்தக் கடியாரத்தையே கண்களால் அணைத்திருந்தார்.

சுவரிலிருந்த கடியாரத்தை ஏறிட்டேன். அகலமான க்வார்ட்ஸ் கடியாரம். எவ்விதப் பிரத்தியேக அழகுமின்றி, வெள்ளையில் கறுப்பு எண்கள், முட்களுடன் எளிய தோற்றம் கொண்டது. அப்பா பார்க்கும் பார்வையைக் கண்டால் ஏதோ தங்க 'டயலில்' வைர எண்கள் மின்னுவதாகவே யாரும் நினைப்பார்கள். இதன் விலை நூற்று முப்பது ரூபாயோ என்னமோ, அண்ணா சொன்னார். இரண்டு நாள் முன்புதான் வாங்கினாராம். நான் நானூறு ரூபாயில் மிக நேர்த்தியான தோற்றத்தோடு ஒரு க்வார்ட்ஸ் கடியாரம் அப்பாவுக்கென்றே தனியாய் வாங்கி அவர் அறையில் மாட்டியிருந்தேன். அதைவிட இது ஒசத்தியாய் விட்டதா அப்பாவுக்கு?

காப்பியோடு வந்த அண்ணி, "என்ன இது, டிபன் இன்னும் அப்படியே இருக்குதே! சட்னி போதலையா? வேறேதானும் வேணுமா?" என்று என்னை விசாரித்த பின் அப்பாவிடம் திரும்பி, "நீங்க காப்பி எடுத்துக்குங்க மாமா. பதமா ஆத்திக் கொண்டு வந்திருக்கேன்," என்றாள்.

இந்தக் கரிசனத்துக்கு ஒன்றும் குறைச்சலில்லை. அப்பா இப்போது இங்கே வசிக்கவில்லையே! அவரும் நானும் விருந்தினர்கள் போல் மாதம் ஒருமுறை ஒரு ஞாயிறு பிற்பகலில் வந்து போகும் தருணங்களில் இனிமையாய்ப் பழகுவது என்ன கஷ்டம்? அவர் இங்கேயே வசித்து வந்த போது, அண்ணாவும் அண்ணியும் அவர்களின் இரண்டு பெண்களும் கூட அவர் இருப்பது ஒரு தொந்தரவு என்பது போல் நடந்து கொண்டதையெல்லாம் அவர் என்னிடம் சொல்லி எவ்வளவு வருத்தப்பட்டிருக்கிறார்! நான் மனம் தாளாமல் அவரை என்னுடன் அழைத்து வந்து விட்டேன். டவுனில் ஒரு வீட்டின் மாடிப் பகுதியிலிருந்த என் குடியிருப்பில் இரண்டு அறைகள். பிரம்மச்சாரியான எனக்கு அவை போதும். இப்போது அப்பாவுக்கு அவற்றில் ஒன்றைக் கொடுத்தால் எனக்கு ஒரே அறையில் சிறிது நெருக்கடிதான். அதற்காக, பெற்ற தகப்பனாரைச் சிறுமைப்பட விட்டு விட முடியுமா?

அவருக்கென்று ஒதுக்கிய அறையில் என்னாலியன்றவரை வசதிகள் செய்து கொடுத்தேன். கட்டில், மெத்தை, தலையணைகள் வாங்கிப் போட்டேன். சப்தம் போட்டு ஓடிக் கொண்டிருந்த பழைய கூரை விசிறியை என் அறைக்கு மாற்றி விட்டு, அங்கிருந்த புதியதை அவர் அறையில் பொருத்தச் செய்தேன். வயதானவர். சப்தத்தினால் தூங்க முடியாமல் ஏன் அவதிப்பட வேண்டும்? சுவர் அலமாரியை ஒழித்துக் கொடுத்தேன். மேல் இரண்டு தட்டுகளில் அவர் உடைகளும் பிற பொருட்களும். கீழ்த் தட்டுகளில் அவர் புத்தகங்கள். வேதாந்தம், தத்துவம், கந்தபுராணம், திருவாசகம், இத்யாதி. படிக்க வசதியாய் அலமாரி அருகிலேயே ஒரு சாய்வு நாற்காலி. மூலையில் ஜோடியாய் மேஜையும் நாற்காலியும்.

# இந்தக்



கட்டிலை அடுத்து இரவில் படுத்துக் கொண்டே படிக்க ஓர் உயர முக்காலி மேல் மேஜை—விளக்கு. அப்படியே கண்களை நிமிர்த்தினால் எதிர்ச் சுவரில் கடியாரம்.

நான் இவ்வளவு செய்திருந்தும் இப்போது அண்ணாவின் வீட்டில் அப்பா, "ம், காப்பியைக் கொடும்மா... இந்தக் கடியாரம் ரொம்ப அழகாயிருக்கு" என்றபடி காப்பித் தம்ளரை வாங்கிக் கொள்ளும் போதும் சுவரை நிமிர்ந்து பார்த்து, அண்ணா வாங்கிய கடியாரத்துக்குக் கண்களை அர்ப்பணித்திருந்தார்.

நான் தட்டில் கையலம்பினேன். அண்ணி என்னை வியப்போடு பார்த்தாள்.

"ஏன், தோசை நல்லாயில்லையா? அப்படியே வச்சிட்டுக் கை கழுவிட்டீங்களே?"

"பசியில்லே அண்ணி. காப்பி கூட வேணாம்."

"ஏண்டா பசியில்லே?" என்று எதிரில் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்த அண்ணா கேட்டார்.

"நேத்து ஆபீஸ்ல ஒரு 'கலீக்' உத்தியோக உயர்வில் மாத்தலாகிப் போறதுக்காக விருந்து கொடுத்தோம்னு சொன்னேனில்லையா? எனக்கு வயிறு இன்னமும் 'ஹெவி'யாயிருக்குது."

# கடியாரம் மிக அழகு



"நல்லபிள்ளை போ! நேத்துச் சாப்பிட்ட விருந்தா இன்னும் ஜீரணமாகலே? உங்களுக்கெல்லாம் ஆரோக்கியமே கிடையாதுடா!" என்றார் அப்பா. குரலில் லேசாய்ப் பெருமிதம். தம் ஆரோக்கியத்தைப் பற்றி எப்போதுமே அவருக்குச் சிறிது கர்வம் உண்டு. அறுபத்தைந்து வயதிலும் உடற்கூறு ரீதியாகத் தம் மகன்களை விடத் தாம் திடமானவர் என்பது அவர் எண்ணம். அது ஓரளவு உண்மையும் கூட.

"ஹூம், எல்லாம் நோஞ்சான்கள். எங்க காலத்து உடல் ஆரோக்கியம் உங்களுக்கில்லே, உங்களுக்கிருக்கிற ஆரோக்கியம் கூட உங்க குழந்தைகளுக்கு இருக்காது. பாரேன், ரொம்ப ருசியாய்ச் செஞ்சிருக்கா தோசை. இந்தப் பயலுக்குச் சாப்பிடக் குடுப்பனை இல்லையே" என்று அப்பா காப்பியைப் பருகினார். "அமிருதமாய் இருக்குடா காப்பி! கொஞ்சம் குடியேன். ரொம்ப நல்லாப் போட்டிருக்கேம்மா. இந்தக் கடியாரம் மூந்தா நாள்தான் வாங்கினானாமே உன் புருஷன்? ரொம்ப அழகா, அம்சமா இருக்கு.

குடும்பத்தினர் எல்லாருமாய் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது நான் அதிகம் கலந்து கொள்ளவில்லை. அண்ணா கூட, "என்னடா ஒரு மாதிரி இருக்கே? வயிறு நோகுதா?" என்றார்.

ஆர். சூடாமணி

''கொஞ்சம் களைப்பாயிருக்கு. வேறொண்ணுமில்லே. வீட்டுக்குப் போய் ஒரு சின்னத் தூக்கம் போட்டாச் சரியாயிடும். கிளம்பலாமாப்பா?''

''ஓ, நான் தயார்.'' அப்பா பளிச்சென்று எழுந்து நின்றார். கைத்தடி தேவையில்லாத துள்ளல். நிமிர்ந்த முதுகு.

''போய்ட்டு வரேன் அண்ணா.''

''சரி. மறுபடி எப்போ வரே?''

''பார்ப்போம்.''

''நான் கிளம்பறேண்டா... இந்தக் கடியாரம் நல்லாயிருக்கு. நல்லதாப் பார்த்து வாங்கியிருக்கே.''

**வீ**டு திரும்பி அப்பா தம் அறைக்குச் சென்ற பிறகும் முன்னாலிருந்த என் அறையில் நான் இருக்கை கொள்ளாமல் இப்படியும் அப்படியுமாய் நடந்தேன். பிறகு அப்பாவின் அறைக்குச் சென்றேன். சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தார்.

அவர் படுக்கை எதிரிலிருந்த சுவரைப் பார்த்தேன். அவருக்காக நான் வாங்கி மாட்டியிருந்த க்வார்ட்ஸ் கடியாரம் அங்கு ஓர் ஆபரணம் போல் பொலிந்தது. பெரிதாய், வட்ட வடிவமாய், இரவு வானில் நட்சத்திரங்கள் ஜொலிப்பது போன்ற எண்களுடன் எத்தனை நேர்த்தி, என்ன அழகு, என்ன 'ஸொஃபிஸ்டிகேஷன்'!

''அப்பா!''

''ம்?'' என்றார் கண்களை நிமிர்த்தாமலே.

''அப்பா... என்ன படிக்கறீங்க?''

''மணிவாசகரோட 'திருக்கோத்தும்பி'. அடே, என்ன அழகுடா! உரக்கப் படிக்கறேன், நீயும் கேக்கறயா? 'தோலும் துகிலும்...'''

''இங்கே உங்களுக்கு என்னப்பா குறை?''

அவர் படிப்பது நின்றது. புத்தகத்தில் விரல் வைத்து மூடிக் கொண்டே மூக்குக் கண்ணாடியினூடே என்னை ஏறிட்டுப் பார்த்தார்.

''என்னடா கேள்வி இது?''

''நான் கேட்டதுதான் கேள்வி. இங்கே என்ன குறை உங்களுக்கு?''

''எதுவுமில்லையே?''

''பின்னே அண்ணா வீட்ல ஏன் அப்படிப் பேசினீங்க?''

''எப்படி? ஓ. உன் அண்ணியின் டிபன் காப்பியைப் புகழ்ந்ததைச் சொல்றயா? எல்லாம் ஒரு நாகரிகம்தான். யாரானும் ஏதானும் கொடுத்தா நன்றின்னு சொல்றதில்லையா? அது மாதிரி.''

''நான் அதைக் கேக்கலே. அந்தக் கடியாரத்தை அப்படிப் புகழ்ந்தீங்களே, அண்ணா செய்யறதெல்லாம்தான் உங்களுக்குப் பிடிக்குதுன்னா அப்போ இங்கே ஏதாவது குறையோன்னு நினைக்கத் தோணுதில்ல?''

''ஒரு குறையுமில்லே.'' அவர் குரல் மிருதுவாயிற்று. ''இங்கே நான் ரொம்ப நிம்மதியாயும் மகிழ்ச்சியாயும் இருக்கேண்டா ராஜா!'' தாழ்ந்த ஒலியில் குரல் கமுகமுக்கச் சொற்கள் வந்தன. நான் அருகில் சென்று அவர் கையைப் பற்றி மென்மையாய் அழுத்தினேன்.

''ஸாரிப்பா. நான் அப்படிக் கேட்டிருக்கக் கூடாது.''

சில விநாடிகள் கடந்தன.

''அந்தக் கடியாரம் என்னப்பா பெரிசா அழகு? வெளிறடிச்சுக்கிட்டிருந்தது. ஒரு நாகரிகத்துக்குன்னாக் கூட அப்படித் திருப்பித் திருப்பிப் புகழணுமா என்ன? நான் வாங்கியிருக்கிறதை விடவா அது அழகு?''

அவர் அனிச்சையாய்ச் சுவர்க் கடியாரத்தைப் பார்த்தார். கண நேரம் மௌனமாயிருந்தார். ''சரி, இனிமே புகழலே'' என்று கூறி விட்டுப் புத்தகத்தை மீண்டும் பிரித்துக் கொண்டார்.

எனக்குப் பரிதாபமாகி விட்டது. ''அப்பா, சாயங்காலம் ரெண்டு பேருமா பீச்சுக்குப் போய் வரலாமா?'' என்றேன்.

''ஞாயிற்றுக் கிழமையில நண்பர்களோடு போய் உல்லாசமாய்ப் பொழுது போக்கேன்! இந்தக் கிழவனோட எதுக்கு?''

''இந்தக் கிழவன்தானே என் அப்பா! அதுக்குத்தான்.''

ஒரு புன்னகைப் பரிமாற்றம் எங்களிடையே நிகழ்ந்தது.

''சரி, போகலாம்.''

சமையற்காரப் பையன் இரவு உணவைத் தயாரித்து விட்டுச் சென்றபின் அப்பாவும் நானும் உடை மாற்றிக் கொண்டு கிளம்பினோம். வீட்டின் முன்கதவுப் பூட்டின் சாவியை அப்பாவிடம் கொடுத்து ''நான் கீழே போய் ஸ்கூட்டரை எடுக்கறேன், நீங்க கதவைப் பூட்டிக்கிட்டு வாங்க,'' என்று சொல்லிப் படியிறங்கிப் போனேன். ஸ்கூட்டரை உதைத்துக் கிளப்பி உட்கார்ந்து, அப்பா இறங்கி வந்து என் பின்னே உட்காரக் காத்திருந்தேன்.

காத்துக் கொண்டே இருந்தேன். இரண்டு நிமிஷம், மூன்று, நான்கு...

''என்னப்பா, இன்னுமா பூட்டலே?''

''இதோ ஆச்சுடா! ஒரே நிமிஷம், வந்துடறேன்.''

இரண்டு நிமிஷங்கள் கடந்தன. அப்பா இன்னும் குனிந்து பூட்டைக் குடைவது தெரிந்தது.

''வாங்கப்பான்னா!''

''இதோ வரேன்... தப்புச் சாவியைக் கொடுத்துட்டியேடா? பூட்டில் நுழைய மாட்டேங்குதே?''

நான் ஸ்கூட்டரை நிறுத்தி விட்டு மறுபடியும் மாடிக்குப் போனேன். பூட்டைப் பார்த்தேன். அதன் சாவித் துவாரம் தலைகீழாய்த் திரும்பியிருந்தது. அது நேராக இருப்பதாகவே எண்ணி அப்பா அதனுள் சாவியை நேராக நுழைக்க முயன்று தடுமாறிக் கொண்டிருந்தார்.

சட்டென்று அப்பாவைத் திரும்பிப் பார்த்தேன்.

''தப்புச் சாவியாடா?''

எத்தனை நாளாக இப்படி?

பிரமித்து நின்ற போது பேச்சு எழவில்லை.

அப்பா கடைசியில் சமாளித்து விட்டார். ஓர் ஊகத்தில் விரல் நுனியால் நாகக்காய்த் தொட்டுப் பார்த்து விஷயத்தை அறிந்து

''நேத்து, சைக்கிள்ல லைட் இல்லாம போய் மாட்டிக்கிட்டேன்...''

''அடடா! அப்புறம் என்னாச்சு?''

''நல்லவேளை, உன் அட்ரசைக் கொடுத்துட்டுத் தப்பிச்சிட்டேன்!''

— சீர்காழி ஸ்ரீராம்.



சாவித் துவாரத்தை நகத்தால் சரியாய்த் திருப்பிச் சாவியை நுழைத்துப் பூட்டி விட்டார். என் பக்கம் திரும்பாமலேயே மிகையான கலகலப்புடன், ''சாவி சரிதான். பூட்டுதான் ரொம்பப் பழசாயிடிச்சு போலிருக்கு. அதான் சாவி சரியாப் பொருந்தாம கொஞ்சம் கஷ்டமாயிருந்தது பூட்ட,'' என்றார்.

நான் எதுவும் சொல்லாமல் படியிறங்கினேன். என் பின்னோடு அவர் இறங்கி வந்தார்.

**ம**றுநாள் அதிகாலை அவர் அறியாமல் அவரைக் கவனித்தேன். அப்பா உறக்கம் கலைந்து கண் திறந்ததும் படுத்தவாறே மேஜை விளக்கை ஏற்றினார். அதன் வெளிச்சம் எதிர்ச் சுவர் மீது படிந்தது. விளக்கின் பக்கத்திலிருந்த மூக்குக் கண்ணாடியை எடுத்து அணிந்து கொண்டு எதிரே சுவரிலிருந்த கடியாரத்தைப் பார்த்தார். பிறகு படுக்கையை விட்டு எழுந்து சுவரை அணுகிக் கடியாரத்தை அருகிலிருந்து பார்த்து மணி தெரிந்து கொண்டு பல் விளக்கச் சென்றார்.

அவருக்குக் காப்பி கலந்து எடுத்துக் கொண்டு அவர் அறைக்குச் சென்றேன். கட்டில் பக்கத்தில் நின்று சுவர்க் கடியாரத்தைப் பார்த்தேன். இரவு வானில் நட்சத்திரங்கள் மின்னுவது போல், கறுப்பு நிற 'டயலில்' பொன்னிற எண்கள், முட்கள். பார்க்கும் கோணமும் வெளிச்சமும் சரியாக இல்லையானால் வெறும் கரிய மொத்தை. அதுவும் கண் பார்வை மங்கத் தொடங்கும் போது...

அண்ணா வீட்டில் வெள்ளைக் கடியாரத்தில் கறுப்பு எண்களும் முட்களும். பார்த்தவுடன் பளிச்சென்று தெரிகிறாற் போல்.

'ரொம்ப அழகாயிருக்கு இந்தக் கடியாரம்.'

தெளிவுதான் இப்போதைய தேவை. 'ஸொஃபிஸ்டிகேஷன்' அல்ல.

அவர் சொல்லவே இல்லையே?

தன் ஆரோக்கியத்தில் கர்வம் காணும் அந்த இயல்பை எண்ணிப் பார்த்துக் கொண்டேன்.

அப்பா அறைக்குள் வந்தார்.

''இந்தாங்கப்பா காப்பி.''

''நீ குடிச்சியோ?''

''இன்னும் இல்லே.''

''வா, போய் ஒண்ணாக் குடிக்கலாம்.''

அன்று மாலை அலுவலகத்திலிருந்து திரும்பியதும் கையிலிருந்த அட்டைப் பெட்டியைக் காகிதச் சுற்றிலிருந்து பிரித்து எடுத்தேன்.

''இந்தாங்கப்பா.''

''என்ன? அட, உன் அண்ணன் வீட்டுக் கடியாரம் மாதிரியே!''

''உங்க ரூமுக்காகத்தான் வாங்கியிருக்கேன்.''

கணநேரம் கண்கள் தாமாக ஒளி விட, அப்பா அதைப் பிரயாசையுடன் அடக்கிக் கொண்டார். ''எனக்குத்தான் ஒண்ணு ஏற்கெனவே வாங்கிக் கொடுத்திருக்கியேடா! பணத்தை வீணாக்கி இன்னொண்ணு எதுக்கு?''

''இல்லேப்பா. அண்ணா வீட்டில் இந்த மாதிரி வெள்ளை நிறக் கடியாரம் உங்களுக்கு ஏன் அவ்வளவு பிடிச்சிருந்ததுன்னு நான் புரிஞ்சுக்கிட்டேன்.''

அவர் சிறிது அரண்டு போனாற்போல் தலையை 'இல்லை'' என்று அவசரமாய் ஆட்டிக் கண்களை விலக்கிக் கொண்டார்.

''அப்படி ஒண்ணும் குறிப்பா ஏதும் காரணம் இல்லே. சாதாரணமாத்தான் சொன்னேன். நீ ஏன்...''

''அப்பா, நீங்க வயசு முதிர்ந்தவர். படிக்கிறதெல்லாம் பக்தியும் தத்துவமுமாய் மேலான விஷயங்கள். உங்க மனசு நாளுக்கு நாள் தூய்மையாய்க்கிட்டு வருது. வெள்ளை தூய்மையின் அறிகுறியில்லையா? அதனால் உங்களுக்குக் கறுப்பை விட வெள்ளை அதிகம் பிடிச்சுது. இதுதான் காரணம்னு எனக்குப் புரியாதா என்ன?''

அவர் முகத்தில் எழுந்த நிம்மதியையும் வியர்வையைத் துடைத்துக் கொள்ளும் 'அப்பாடா' என்ற ஆசுவாசத்தையும் காணாதவன் போல் நேரே அவர் அறையின் அந்தச் சுவரை அணுகினேன். ''இந்த வெள்ளைக் கடியாரத்தை இங்கே மாட்டிட்டுக் கறுப்புக் கடியாரத்தை வெளியே என் ரூமில் மாட்டிக்கறேன்.''

மாற்றத்தை முடித்து விட்டு நான் திரும்பி நின்று அப்பாவைப் பார்த்த போது அவரும் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். உதடுகள் லேசாய் நடுங்கினவா? பிறகு புன்னகை செய்தார். அருகில் வந்து என் தோள் மேல் கை போட்டுக் கொண்டார். ''இந்தக் கறுப்பு 'டயல்' உன் ரூமுக்கு ரொம்ப அழகாயிருக்கு'' என்றார்.

# சுக போகத் தீவுகள்

## 27

மூத்துச் சுண்ணாம்பு அடித்த வெள்ளைச் சுவரில், 'டியூப் லைட்டை' ஒட்டிப் பல்லி ஒன்று படுத்துக் கிடந்தது.

''ஒரு சாண் அளவே ஆன ஒரு குட்டி மனிதன் படுத்துக் கொண்டிருப்பது மாதிரி, இல்லை?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி விநோதினியைப் பார்த்து.

விநோதினி அந்தப் பல்லியைப் பார்த்தாள். சரியாகத்தான் சொல்லியிருந்தான் அவன். கைகள், கால்கள் இரண்டையும் பரப்பியபடி, குப்புறப்படுத்துக் கிடக்கும் ஒரு மனிதனைப் போலத்தான் காட்சி தந்தது அது.

''ஆம். அப்படித்தான் தென்படுகிறது. ஒருகால், நமது மூதாதையாக அது இருக்கலாம்.''

''மூதாதையா?''

''ஆம். ஓர் உயிர் வளர்ச்சிதானே ஆறு உயிர் மனிதன்? உயிராகி, புழுவாகி, மீனாகி, பறவையாகி எத்தனையோ வளர்ச்சி பெற்று, அந்த ஆதி உயிர்தானே மனிதனாகி இருக்கிறது. அந்த மனிதனின் பரம்பரைதானே நாம்? மனித இனம் நடந்து வந்த வளர்ச்சிப் பாதையில், பல்லி ஒரு கட்டம்தானே? அது பல்லியாகவே இருக்க, நாம் மட்டும் மனிதனாகி விட்டோம். அந்தச் சொந்தத்தில்தான், இவைகள் மனிதர் வீடுகளைச் சுற்றிக் கொண்டிருக்கின்றனவோ என்று தோன்றியது.''

அவன் சிரித்தான்.

அவள் இடுப்பை உயர்த்தி நெட்டி முறித்தாள்!

''அப்பப்பா. இன்று முழுக்க உட்கார்ந்து உட்கார்ந்து, உடம்பே சிறுத்துப் போய் விட்டது மாதிரி இருக்கிறது. எழுங்களேன். காலாற கொஞ்சம் நடந்து வரலாம்.''

அவன் எழுந்தான்.

''காரை எடுத்துக் கொள்ளலாமா? கடற்கரை வரை சென்று, அப்புறம் அங்கிருந்து நடக்கலாம்.''

''வேண்டாம். இங்கிருந்து கூப்பிடு தூரத்தில் கடல். சும்மா நடந்து வாருங்கள்! ரொம்பத்தான் சுகம் பெற்று விட்டீர்கள்.''

அவர்கள் நடந்தார்கள். விநோதினிக்கு நடப்பது மிகவும் பிடிக்கும். மாலையும் இரவும் சந்திக்கிற நேரத்தில், மனித நெருக்கடி இல்லாத நடைபாதைகளில், வீட்டுக் காம்பவுண்டுக்குள் இருக்கும் மரங்களின் நிழல்களை மிதித்துக் கொண்டு, தன்னைப் புரிந்து கொண்ட, நேசிக்கிற சக ஆத்மாவோடு நடப்பது மிக இனிய அனுபவமாக அவளுக்குத் தோன்றும்.

இப்போதும் அப்படித்தான் தோன்றுகிறது. காற்று மிக இதமாக வீசிக் கொண்டிருந்தது. ஒரு குழந்தையின் ஸ்பரிசத்தைப் போல அது தண்ணென்றிருந்தது. இப்படியே, உலகத்தின் இறுதி விளிம்பு வரை, ஆண்டுக்கணக்கில், பசி தாகமற்று நடக்க மாட்டோமா என்று இருந்தது அவளுக்கு. தூரத்தில் கடல் ஆர்ப்பரிப்பது கேட்டது. அவ்வளவு சீக்கிரம் கடல் சமீபித்தது அவளுக்கு ஏமாற்றமாகக் கூட இருந்தது. வானத்தில் நிலா மேகங்களில் சிக்கிப் புதைந்து கிடந்தது. மக்கள், இந்தப் பகுதிகளில் எப்போதும் குறைவாகவே நடமாடுவார்கள்!

அவர்கள் ஓரிடத்தில் அமர்ந்தார்கள்.

''இன்னும் பல்லியைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்களா?'' என்று கேட்டான் கிருஷ்ணமூர்த்தி.

''இல்லை. அதைக் கடந்து வந்து விட்டேன். மனிதனுக்குப் பக்கத்தில் நிற்கிறேன். இனி மனிதனின் அடுத்த கட்டம் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன்.''

''நமக்கு முன்பாக நீட்சேயும், அரவிந்தரும் அது குறித்து யோசித்து விட்டார்கள். ஒற்றைச் 'செல்' அமீபாவிலிருந்து மனிதன் வளர்ந்தான் எனில், இங்கிருந்து அவன் அதி மனிதனாக, 'சூப்பர் மேனாகத்தான்' வளர்வான் என்று அவர்கள் கருதினார்கள்.''

''அதிமனிதன் சாத்தியம்தானா?'' விநோதினி கேட்டாள்.

''ஏன் சாத்தியம் இல்லாமல்?''

''எனக்குத் தோன்றவில்லை. மனிதன் புற உலகை, ஐம்பூதங்களையும் ஜெயித்தது என்னவோ உண்மை. அகத்தை, ஆணவத்தை, ஐயத்தை, மிருகத்தனத்தை ஜெயித்தானா? காலைப் பேப்பரைப் பிரித்தால், ஈழமும், பஞ்சாபும் கண்ணில் படத்தானே செய்கிறது. மனித உயிர்கள், அவை யாருடையவையாக வேண்டுமானாலும் இருக்கட்டும், அவ்வளவு மலிவாகவா போயிற்று? ஒரு பக்கம் அணுகுண்டுகளைச் செய்து இட்டிலி அடுக்குவது மாதிரி அடுக்கிக் கொண்டு, மறுபக்கம் பட்டனை அழுக்கினால் மேஜைக்குச் சாப்பாடு வருகிற விஞ்ஞான வளர்ச்சி, ஒரு வளர்ச்சிதானா?

பிரபஞ்சன்

மனிதனைப் போலவே உலோக மனிதனைச் சிருஷ்டித்து விட்டால் நாம் வளர்ந்தவர்கள் ஆவோமா? டெஸ்ட்டியூபில் என்ன, டூத் பேஸ்ட் டியூபில்வேண்டுமானாலும் குழந்தைகளை உற்பத்தி செய்யுங்கள். ஆனால், இதயத்தை எப்படி உருவாக்குவீர்கள்? வாடிய பயிரைக் கண்ட போது வாடுகிற மனசை எந்தக் கம்பியை வளைத்துப் பண்ணுவீர்கள்?''

''ராமனைப் போன்ற மாமனிதர்களை நமது முன்னோர்கள் படைத்துக் காட்டியிருக்கிறார்களே! நமக்கு எடுத்துக்காட்டத்தானே? ராமனைப் போன்றவர்கள் அன்றே இருந்தார்கள் எனில் ஏன் இன்று தோன்ற முடியாது?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

''ராமனை மாமனிதனாக என்னால் ஒப்புக் கொள்ள இயலவில்லை'' என்றாள் விநோதினி. ''எந்த நியாயமும் இன்றி அவன் வாலியைக் கொன்றதை விடுங்கள். சீதையின் மேல் அவன் நம்பிக்கையும், அபிப்பிராயமும் நம் போன்ற சாதாரண மனிதனில் இருந்து எப்படி வேறுபட்டுள்ளது? யோசியுங்கள். இராவண வதம் முடிந்த கையோடு, ஊர் உலகுக்காக அவளை அக்னிப் பிரவேசம் செய்யச் சொன்ன ராமன், நம்மை விட, நம் எதிர் வீட்டு, பக்கத்து வீட்டுக்காரனைக் காட்டிலும் எந்த வகையில் உயர்ந்தவன்? தெருவோரத்தில், நடைபாதையில் வாழ்கிறவன் நேரடியாகக் குற்றம் சாட்டிக் கூந்தலை இழுத்துப் போட்டு அடிப்பான். அது எவ்வளவோ மேல். அந்த நிமிஷத்துக்கு அந்தப் பிளாட்பாரம்வாசி உண்மையாக இருக்கிறான். ராமன் தன் மனசுக்குள் இருப்பதை மறைத்து, தான் ஏதோ மிகப் பெரியவன் மாதிரி, தனக்குத் தன் மனைவியின் மீது எந்தச் சந்தேகமும் இல்லாதவன் மாதிரி, ஊர் உலகுக்குத்தான் அந்த அக்னிப் பரீட்சை என்பது மாதிரி நடித்தானே. அது மாமனிதன் லட்சியமா? அவன் ஒரு சராசரி மனிதனாகத்தான் படைக்கப்பட்டிருக்கிறான். மாமனிதனாக வாழ முயற்சி செய்யும் ஒரு சராசரி மனிதன் அவன். சில சமயங்களில் தன் லட்சியங்களிலிருந்து விழுந்து விடுகிற ஒருவன்.''

**ம**ண்ணில் கை அலைந்தவாறே அவள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த அவன் சொன்னான்: ''ஊர் உலகுக்காக அந்த அக்னிப் பிரவேசம் நிகழவில்லை என்று எப்படிச் சொல்கிறீர்கள்?''

''அப்படிப் பிறருக்காகத்தான் அது நடந்தது எனில், பிற்பாடு யாரோ சொன்னான் என்பதற்காகத் தன் மனைவியை மீண்டும்



கானகம் அனுப்புவானா? இரண்டுமே குயுக்தி. முதல் குயுக்தி ஊரார் மேல் பழி போடுவது. இரண்டாவது குயுக்தி, குடி மகன் மேல் பழிபோடுவது. உண்மையில் அவன் மனசுக்குள் இருந்ததுதான் வெளிப் பட்டது. ராமன் உண்மையில் சீதையை நம்ப வில்லை என்றுதான் படுகிறது. தன் மனைவி மேல் நம்பிக்கை உள்ளவன், பிறர் வார்த்தைகளை நம்புவானா?''

கிருஷ்ணமூர்த்தி யோசித்தபடி சொன் னான்: ''நீங்கள் சொல்வதில் உண்மை இருப்பது மாதிரிதான் படுகிறது. ஆனால் ஒரு பெண்ணின் மேல், அதுவும் மகாராணி யின் மேல் அபவாதம் வந்தபின், ராமனுக்கு அதிகாரம் செலுத்துவதில் மனச் சங்கடம் ஏற்படும்தானே?''

''அதுதான் நான் சொல்வதும்! மனச் சங்கடம் வெளியில் இருந்து வரவில்லை. உள்ளே இருப்பதுதான். அது வெளிப்படச் சந்தர்ப்பத்துக்குக் காத்துக் கொண்டிருந்தது. சந்தர்ப்பம் வாய்த்ததும் வெளிப்பட்டது. அபவாதம் என்கிறீர்களே! பொது வாழ்க் கைக்கு வந்து விட்ட எந்தப் பெண்ணின் மேல் அபவாதம் வரவில்லை, சொல்லுங் கள். ஏன், என் மேல் கூட அபவாதம் வந்து விட்டதே, உங்களுக்குத் தெரியாதா? எத் தனை பேருடன் என்னை இணைத்துப் பேசுகிறார்கள்?''

கிருஷ்ணமூர்த்தி மௌனமாய் இருந் தான். அது அவன் அறிந்த ஒன்றுதான். ஒவ்வொரு முறை விநோதினியின் பெயர் ஒருவனுடன் இணைத்துப் பேசப்படும்போ தெல்லாம், பேசப்படுவதைக் கேட்கும்போ தெல்லாம் அவன் மனம் குன்றிப் போவ துண்டு.

''என்ன யோசிக்கிறீர்கள்?''

''எனக்கும், உங்கள் பெயர் இப்படி துஷ்பிரயோகப்படுத்தப்படும்போதெல் லாம் மனசுக்குச் சங்கடமாகத்தான் இருக் கிறது.''

''சங்கடமே படக்கூடாது. சங்கடப்படும் போது, வதந்தியை நீங்கள் கொஞ்சமாக வேனும் நம்புகிறீர்கள். நம்ப விரும்புவீர் கள். அது ஆபத்தான மலைச்சரிவுக்கு உங்களை அழைத்துச் சென்று விடும். இப்படிப்பட்ட வதந்திகள் உங்கள் காது களில் வந்து விழும்போது, அவைகளைச் சொல்கிறவர்களைப் பார்த்துச் சிரிக்கவும், அலட்சியப்படுத்தவும், அவர்கள் தகுதியே அதுதான் என்று தீர்மானிக்கவும் நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். கிருஷ்ண மூர்த்தி! உங்களுக்கு நான் சொல்லவில்லை, இரவு பன்னிரண்டு மணிக்கும் இரண்டு மணிக்கும் கூட எனக்குப் போன்கால் வருகிறது. கட்சிக்காரர்கள்தான். கட்சிக் காரர்கள் இல்லாத சமூகப் பெரியவர்கள் என்று வேஷம் போடுகிறவர்கள். கட்சிக் காரர்கள், கட்சிப் பணி என்று ஆரம்பித்துக் கடைசியில் எங்கு சந்திக்கலாம் என்பதில் போய் முடிகிறார்கள். வெளியாட்கள், ஹோட்டலில் எனக்கு அறை போடுகிறார் கள். வீடு வாங்கிக் கொடுத்து, காரும் கொடுத்து, செலவுக்கு மாசம் பத்தாயிரம் கொடுப்பதாகக் கூறுகிறார்கள். தமிழரின் நாகரிகம் இது! தமிழர் என்ன, மனிதனே இப்படித்தான் இருக்கிறான். என்ன செய்யலாம்? ஒன்று பொது வாழ்க்கையை முற்றாகப் புறக்கணித்து ஒதுங்கலாம். அப்படியும் பிரச்னை முளைக்காமல் இருக் குமா? குறைந்தபட்சம் வீட்டுக்கு வரும் காய்கறிக் கடைக்காரனும், பால்காரனும் பேச மாட்டார்கள் என்பது என்ன நிச்ச யம்? ஆண்களே இல்லாத இடம் இருந்தால், அங்குதான் போய் வாழ வேண்டும் போல இருக்கிறது. அப்படி ஓர் இடம் இருக்க முடியுமா?''

அவன் சொன்னான்.

''ஆண்கள் இல்லாத இடத்தில் பெண் கள் இருப்பார்களே! வதந்தி என்றால் பெண்களுக்கு ரொம்ப இஷ்டமான சமாசாரம் அல்லவா?''

''அடடா! ஆண்களைக் கூட என்னால் சமாளித்து விட முடிகிறது. பெண்களின் பிரச்னைதான் ரொம்பக் கஷ்டம். நான் அணிகிற புடைவை, அதன் வண்ணம், அதன் அமைப்பு எல்லாம் கூட விமர்சிக் கப்படுகிறது, பெண்களால். என்ன பண்ண?''

''ஆக, ஆண்கள், பெண்கள் அற்ற சில், வால்ரஸ் மிருகங்கள் வாழ்கின்ற பனிப் பிரதேசத்துக்குத்தான் நீங்கள் போக வேண்டும்.''

இருவரும் சிரித்தார்கள்.

நிலவு வானத்தில் கண்ணாமூச்சி ஆடுவது போல, மறைந்தும் வெளிப்பட்டும் இருந்தது. சேலையை கலைக்கிற விதமாகக் காற்று பலத்திருந்தது. இருட்டு. தனிமை. கடற்கரைக் காற்று. மனம் இளகி விநோதினி சொன்னாள். ''இந்தச் சூழ் நிலை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.''

''எனக்கும்தான்.''

சற்று நேரம் கழித்துக் கிருஷ்ணமூர்த்தி



மனைவி: ''இது போலி பைனான்ஸ் கம்பெனின்னு எப்படி உறுதியாச் சொல் றீங்க...?''

கணவன்: ''புதுசாச் சீட்டுக் கட்ட ஆரம்பிக் கிறவங்களுக்கு எவர்சில்வர் குடத்தோடு இலவசம்'ன்னு அறிவிக்க இருக்கிறதை வைச்சுத்தான்!''

— எஸ். ஷெந்தில்.

சொன்னான். "எனக்கு உங்களிடம் ஒரு விஷயம் கேட்க வேண்டும். நீண்ட நாட்களாக என் மனசுக்குள் இருக்கிற கேள்வி இது. தயவு செய்து சாமர்த்தியமாகப் பதில் சொல்லி விடாதீர்கள்! உண்மையைச் சொல்லுங்கள். அரசியலை இவ்வளவு காரமாக விமர்சித்த நீங்கள், எப்படித் திடுமெனப் பிரவேசித்தீர்கள்? பதவி ஏற்றுக் கொண்டீர்கள்?"

அவன் சிரிப்பது அந்த இருட்டிலும் தெரிந்தது.

சொன்னாள். "உங்களை அந்த இடத்திலிருந்து மீட்கத்தான் கிருஷ்ணமூர்த்தி! வெள்ளத்தில் சிக்கியவரை வெள்ளத்தில் வீழ்ந்துதானே காப்பாற்ற முடியும். அரசியல் சுகம் பெற்று விட்ட உங்களை, மக்களிடமிருந்து தனித்துப் போய் விட்ட உங்களை மீட்க எனக்கு வழி தெரியவில்லை. எனக்கு ஒரு சிநேகிதி இருக்கிறாள். அவள் சொல்லித் தந்த வழி இதுதான். நானும் யோசித்துப் பார்த்ததில், எனக்குப் புலப்பட்டதும் அதுதான். ராமாயணம்தான் எனக்கு இந்த விஷயத்தில் உபயோகப் பட்டது. ராமன் எவ்வளவு சிறந்த க்ஷத்திரியன்.. வீரமும் திறமையும் மிக்கவன். தெய்வாம்சம் பெற்றவன். இருந்தும் பெண் விஷயம்தானே அசைத்தது? அகலிகைக்குப் பார்த்த மாத்திரத்தில் பாவப் பிராயச்சித்தம் அருளியவன், தன் பெண்டாட்டிக்கு மட்டும் அக்னிப் பரீட்சை வைத்ததேன்? ஏனெனில் தன் பெண்கள், தான் நேசிக்கும் பெண்கள், தங்களுடையவர்கள் என்று இருக்கிற பெண்கள் மேல் பிறர் வதந்தி பரப்பினால் ஆண்கள் மனம் தாங்குவதில்லை. நீங்களும் ஓர் ஆண்தானே. அந்தத் தந்திரத்தை நானும் கடைப்பிடித்தேன். ஓரளவு வென்றேன். என் மேல் பேசப்படும் வதந்தி, உங்களை ஹிம்சை செய்தது எனக்குத் தெரியும். என்னை இந்த வெள்ளத்திலிருந்து அல்லது நெருப்பில் இருந்து காப்பாற்றி எனக்குப் பின்னால் நீங்களும் வெளியே வந்து விடுவீர்கள் என்று எதிர்பார்த்தேன். கிருஷ்ணமூர்த்தி! அரசியல் பற்றி என் கருத்து எதுவும் மாறி விடவில்லை. மேலும் பலப்பட்டு இருக்கிறது. நான் இந்த நிமிஷம் அரசியலுக்கு முழுக்குப் போட்டு விடுகிறேன். நீங்கள் என்னுடன் வந்து விடுகிறீர்களா? கிருஷ்ணமூர்த்தி! நீங்கள் எவ்வளவு நல்ல மனிதர். எவ்வளவு படித்திருக்கிறீர்கள்? ஏன் இந்த அடியாள் வேலை உங்களுக்கு? அசிங்கமாக இல்லையா உங்களுக்கு. என்னைப் பாருங்கள். சகலத்தையும் உங்களுக்கு அர்ப்பணித்து உங்களுடன் வாழத் துடிக்கும் என்னை ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களுக்கு ஏற்ப அழகிய, அர்த்தம் பொருந்திய வாழ்க்கையை நான் அமைத்துத் தருகிறேன். என்னுடன் வருகிறீர்களா?"

அவன் அவளைப் பார்த்தான். இருட்டில் மின்னும் அவள் கண்களைப் பார்த்தான். பிறகு சொன்னான்:

"வருகிறேன், விநோதினி!"

நிலவு பளீரென்று வெளிப்பட்டது.

(அடுத்த இதழில் முடியும்)

## அருள்வாக்கு



'நீ எப்படி விட்டாயோ அப்படி ஆகட்டும்' என்று சரணாகதி செய்வதுதான் பக்தி. தனக்கு என்று எதுவுமே இல்லாவிட்டால் மனசின் அழுக்குகள் நீங்கி, அது கண்ணாடி மாதிரி சுத்தமாக இருக்கும். அப்போது நிறைந்து ஆனந்தமாக இருக்கலாம்.

பக்தி செய்வதற்கு இன்னொரு முக்கிய காரணம்: அன்பு செலுத்தாமல் வாழ்ந்தால் அதில் ஆனந்தமே இல்லை. அன்பிலே உள்ள ஆனந்தம் வேறெதிலும் இல்லை என்று அநுபவத்தில் தெரிகிறது. ஆனால் நாம் யாரிடம் அன்பு வைத்தாலும் என்றோ ஒருநாள், ஒன்று, நாம் அவரை விட்டுப் பிரிகிறோம்; இல்லாவிட்டால் அவர் நம்மை விட்டுப் பிரிகிறார். ஆனந்த ஹேதுவாக இருந்த அன்பு அத்தனையும் அழுகை மயமாகி விடுகிறது. நம்மை விட்டுப் பிரியாத ஒரே சாசுவத வஸ்து ஈசுவரன்தான். அவனிடம் அன்பு வைத்து விட்டால்? இந்த அன்பு என்றும் சாசுவதமாக ஆனந்தம் தந்து கொண்டேயிருக்கும். இந்த அன்பு முற்றுகிற போது யாவுமே அவனாகத் தெரியும். ஒன்றிடம் அன்பு — அது காரணமாகவே இன்னொன்றிடம் துவேஷம் என்றில்லாமல், எல்லாம் அவனானதால் எல்லாவற்றிடமும் ஏற்றத் தாழ்வில்லாமல் அன்பாக இருப்போம். அன்பற்ற வாழ்வு வாழ்ந்து மநுஷ்ய ஜன்மாவை விருதாவாக்கிக் கொள்ளாமல் இருக்க பக்தியே உதவுகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# ஜோடிப்

"இதோ பார் மேகலா, உனக்கு நான் நல்லதைத்தான் செய்வேன் என்ற நம்பிக்கை இருந்தால் நான் மேலே பேசுகிறேன்... இல்லாவிட்டால் வேண்டாம்!'' என்றார் நடனசுந்தரம், தன் ஒரே மகளிடம்.

"இருக்கிறது''-என்பதை வாயால் சொல்லாமல், தலை அசைத்துக் காண்பித்தாள் மேகலா.

''எனக்கு எதுவுமே தெரியாது என்று நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனால் அத்தனையும் எனக்குத் தெரியும்... உன்னுடன் சுற்றுகிறானே — அந்தப் பையன்... பெயர் என்ன? உம்... கௌதமன்... அவன் 'ஊர்' ஏற்காடு. ஆனால் அப்பா ஹெல்த் இன்ஸ்பெக்டராக வேலை பார்த்து வேலூர்... ரொம்பச் சிரமப்பட்டுக் கோயம்புத்தூரில் இஞ்சினீரிங் படிக்க வைத்திருக்கிறார். நல்ல பிள்ளை... கெட்ட பழக்கம் எதுவும் கிடையாது. நல்ல குடும்பம்... நம்ம ஜாதிதான்... இப்போதே மாதம் கிட்டத்தட்ட மூவாயிரம் சம்பாதிக்கிறான்... உனக்கும் அவனுக்கும் கண் படும் போல் ஜோடிப் பொருத்தம்... ஆ...னா...ல்...''

''நீங்கள் நினைப்பது போல் நான் பச்சைக் குழந்தை இல்லை... எது கெட்டது, எது நல்லது என என்னால் தீர்மானிக்க முடியும்... கௌதமனைத்தான்...''

''ஓகே... ஓகே... இத்தனை பிடிவாதம் உனக்குத் தொடர்ந்து இருந்தால் நான் தடை சொல்ல மாட்டேன். நான் யதார்த்தமாகச் சொல்கிறேன். உனக்கு நல்லது என்று எனக்குப் பட்டதைச் சொல்கிறேன்.''

அவர் என்ன சொல்லப் போகிறார் என்று மேகலாவுக்குத் தெரியும். ஒரு மாதமாகவே அவள் அப்பாவும் அம்மாவும் கூடிக் கூடிப் பேசிக் கொண்டதைத்தான் மேகலாவிடம் சொல்லப் போகிறார்...

நடனசுந்தரத்தின் ''பிஸினஸி''ல் கூட்டாளியாக இருக்கும் ஜீவானந்தத்தின் பிள்ளை திலீப். இன்னும் இரண்டு நாட்களில் அமெரிக்காவிலிருந்து வர இருந்தான். இங்கே படிக்கும் போதே தன் பெயருக்குப் பின்னால் எத்தனையோ எழுத்துக்களைச் சேர்த்துக் கொள்ளும் அளவிற்குப் படித்தவன் — இப்போது அமெரிக்கக் குடி உரிமை பெற்று — அங்கே ஒரு பெரிய கம்பெனியில் ''வைஸ்—பிரஸிடெண்ட்.'' போன வருஷம் அவன் முதல் தங்கையின் கல்யாணத்திற்கென்று அமெரிக்காவிலிருந்து வந்திருந்தான். திருமண வைபவங்களில் கலந்து கொண்ட மேகலாவை அவனுக்குப் பிடித்து விட்டது. மறுபடி மறுபடி — திருமண வைபவங்களை 'வீடியோ'வில் போட்டுப் பார்த்த போது — ''அவளை மணந்து கொண்டால் என்ன?'' என்ற எண்ணம் வளர — தன் தந்தையிடம் கூற — அவர் நடனசுந்தரத்தின் காதுகளில் விஷயத்தைப் போட — அவரும் எங்கிருந்தோ ஒரு பழம் பாலில் வந்து விழுந்தது போல் சந்தோஷப்பட —

மேகலாவிற்குத் 'தலைவலி' தொடங்கியது.

''ஒன்று மட்டும் நிச்சயம் மேகலா — உன் விருப்பு வெறுப்புகளுக்கு நான் நிச்சயம் மதிப்புக் கொடுப்பேன்... உன் பூரண சம்மதம் இல்லாமல் நானாக எந்த முடிவும் எடுக்க மாட்டேன். திலீப் திங்களன்று காலை வருகிறான். சனிக்கிழமை திரும்பப் புறப்படுகிறான். இடையில் ஐந்தே நாட்கள்... நீ அவனுடன் வெளியே போ... பழகிப் பார்... பேசிப் பார்... அவனைப் புரிந்து கொள்ள முயற்சி செய். அடுத்த ஞாயிற்றுக்கிழமை என்னிடம் சொன்னால் போதும். உன் மனம் நிச்சயம் மாறும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.''

''அப்பா! இது எதற்கு அனாவசியமான விஷப்பரீட்சை! வீணாக அந்த மனிதரின் மனத்தில் ஓர் எதிர்பார்ப்பைத் தூண்டி விட்டு...''

''அப்படியில்லை... திலீப் ஒரு பிஸினஸ் மேன்... ஒரு நல்ல வியாபாரி.தனக்கு லாபம் கிடைத்தது என்றவுடன் தன்னை மறந்து எல்லை மீறிக் குதிக்கவும் மாட்டான். நஷ்டம் வந்தது என்பதற்காக அப்படியே மனம் ஒடிந்து குன்றிப் போகவும் மாட்டான். நீ மறுத்தால் கூட அவன் எதுவும் வருத்தப்பட மாட்டான். பெரிதாக எடுத்துக் கொள்ள மாட்டான். உன்னுடன் பேசிப் பழக வேண்டும் என்பது கூட அவன் விருப்பம் தான்!'' என முடித்தார் நடனசுந்தரம்.

மேகலா யோசித்தாள். அவனுடன் பேசித்தான் பார்ப்போமே... பழகித்தான் பார்ப்போமே... அவள் மனத்தில் தோன்றிய ஓர் எண்ணம் முகத்தில் புன்னகையை வளர்த்தது. அவன் பழகும் விதத்திலிருந்து— அவள் பேசும் பேச்சிலிருந்து — ''விட்டால் போதுமடா சாமி!'' என்று அவனை ஓட வைக்க முடியாதா?

''சரி! அப்பா! உங்கள் இஷ்டம்!'' என்றாள் மேகலா முடிவாக.

திங்கட்கிழமை.

திலீப்பை வரவேற்கத் தன் தந்தையுடன் விமான நிலையம் போனாள் மேகலா.

திலீப் கிட்டத்தட்ட ஆறடி உயரம். சுருட்டையான முடி. விசாலமான நெற்றி. விரலிடையே புகையும் சிகரெட். சிவந்த மேனி. தீர்க்கமான நாசி. கபீர் பேடி போல் தாடி மீசை. அதை அழகாக ''டிரிம்'' செய்திருந்

ஜனனி

# பொருத்தம்

தான். நடையில் ஒரு கம்பீரம். பேச்சில் ஒரு சரளம்.

அவனைப் பார்த்த மேகலா முதலில் பிரமித்துத்தான் போனாள். போன வருஷத்தில் பார்த்ததை விட இன்னும் நன்றாய் இருந்தான். முன்பு காலேஜில் படித்துக் கொண்டிருந்த போது எப்போதாவது அவர்கள் வீட்டிற்கு வருவான். நான்கு வார்த்தைகள் தொடர்ந்து பேசத் தடுமாறுவான். அவன் எப்படி இப்படி மாறிப் போனான்?

நடனசுந்தரமும் ஜீவானந்தமும் சேர்ந்து திலீப்பின் ஒரு வார அலுவல்களை ஏற்கெனவே திட்டமிட்டிருந்தனர்.

அன்று இரவு, நடன சுந்தரத்தின் வீட்டில் திலீப்புக்கு விருந்து நடந்து கொண்டிருந்த சமயம்.

மேகலாவும் திலீப்பும் ஒருவரையொருவர் நன்றாகப் பார்த்துக் கொள்ளும்படி இருக்கைகள் எதிரும் புதிருமாகப் போடப்பட்டிருந்தன. ஒரு வருஷம் கழித்து வந்திருக்கும் பிள்ளைக்கு அவன் தாய் தன் வீட்டில் பார்த்துப் பார்த்து — உபசரித்து உபசரித்துச் சாப்பாடு போட்டதன் விளைவு — திலீப்பிற்குப் பசியே இல்லை. போட்டதைக் கொஞ்சம் கொஞ்சம் கொறிப்பது போல் பாவனை செய்துவிட்டு அப்படியே தள்ளி வைத்தான்.

மேகலா இதைக் கவனித்தாள். "திலீப்! உங்கள் அமெரிக்காதான் பணக்கார நாடு... இந்தியா இல்லை... அதிகப்படி பாலை அங்கே சாக்கடையில் கொட்டுவார்கள்... சில சமயங்களில் காசு கொடுத்தாலும் இங்கே பால் கிடைப்பது இல்லை. அதிகப்படி கோதுமையைக் கடலில் கொட்டுவார்கள் அங்கே... காய்ந்த ரொட்டி கூடக் கிடைக்காமல் அலைபவர்கள் இங்கே... எத்தனையோ பேர் சாப்பாடு ஒருவேளை கூடக் கிடைக்காமல் தவிக்கும் போது, இத்தனை உணவைக் குப்பைக் கூடைக்கு அனுப்புவது தப்பு என்று படவில்லை...? எனக்கு என்னமோ இது தண்டிக்கப்பட



வேண்டிய குற்றமாகப் படுகிறது... நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

திலீப்பின் முகம் சட்டென்று சுருங்கியது. அத்தனை பேர் எதிரிலே இது என்ன நாகரிகம் தெரியாத பேச்சு...? மேகலாவின் உதடுகளில் ஏளனம் கலந்த புன்னகை. தன் முதல் அம்பு இலக்கைத் தொட்டு விட்ட திருப்தி.

ஆனால் திலீப் தன்னை வெகு விரைவில் சுதாரித்துக் கொண்டான். ''மேகலா... நீ சொன்னது சரி... இது குப்பைத் தொட்டிக்குப் போகக் கூடாது என்பதற்காக என் வயிற்றைக் குப்பைத் தொட்டியாக மாற்றிக் கொள்ள முடியுமா? தள்ளி வைத்த எனக்குத் தண்டனை என்றால், அளவிற்கு மேல் போட்ட உங்களையும் அந்தச் சட்டம் சும்மா விடக் கூடாது, இல்லையா?''

அனைவரும் 'கொல்' என்று சிரித்தார்கள். மேகலா தனக்குள் சிரித்துக் கொண்டாள். முதல் 'ரவுண்டி'ல் வெற்றி அவளுக்குத்தான். திலீப்பின் நெஞ்சில் முதல் முள்ளைத் தைத்தாகி விட்டது.

இரண்டாம் நாள் ஒரு கல்யாண வரவேற்பு. மேகலாவும் திலீப்பும் அருகருகே அமர்ந்தனர். மாப்பிள்ளை பார்க்க நன்றாக இருந்தான். அந்த ''புல்கானின்'' தாடி கூடப் பொருத்தமாகத்தான் இருந்தது.

''மேகலா... அவர்கள் நல்ல பொருத்தம் இல்லை? ஒருவருக்கென்றே மற்றவர் பிறந்தது மாதிரி இல்லை?'' எனப் பாராட்டினான் திலீப்.

''பாவம்... அந்தப் பெண்... அது என்ன அந்த ஆள் அப்படி ஒரு தாடி வளர்த்துக் கொண்டிருக்கிறான்!''

''தாடி வைப்பது, வைக்காமலிருப்பது எல்லாம் ஒருவனின் தனிப்பட்ட விஷயம் இல்லையா, மேகலா?'' எனக் கேட்டான் நொந்து போன குரலில்.

''தன்னோடு இணைந்து வாழப் போகும் ஒரு மனிதன் எப்படி இருக்க வேண்டும் எனத் தீர்மானிப்பது கூட ஒரு பெண்ணின் தனிப்பட்ட விஷயம்தான் திலீப்.''

இருவருக்கும் பொதுவாகத் தெரிந்த ஒருவர் அவர்கள் பக்கம் வந்தார்.

''எப்போது கல்யாணச் சாப்பாடு போடப் போகிறீர்கள்?'' எனக் கேட்டார்.

'''அங்கிள்... என் கல்யாணத்தைச் சொல்கிறீர்களா? இல்லை — திலீப் கல்யாணத்தைப் பற்றிக் கேட்கிறீர்களா?''

வந்தவர் மேலே ஏதும் பேசாமல் நகர்ந்தார்.

ஐந்து நாட்களும் இப்படியே நகர்ந்தன!

சனிக்கிழமை... திலீப் மறுபடி அமெரிக்கா புறப்பட்டான். மேகலாவிற்குப் 'பரீட்சை ரிஸல்ட்' இன்று தெரிந்துவிடும். திலீப் அவளைத் தனியாகக் கூப்பிட்ட போது — என்ன சொல்லப் போகிறானோ எனப் பயந்தபடி போனாள்.

''மேகலா... உன்னிடம் என்ன சொல்வது, எப்படிச் சொல்வது என்று எனக்குப் புரியவில்லை. நான் எத்தனையோ எதிர்பார்ப்புகளுடன் வந்தேன். இந்த ஐந்து நாட்களில் என்னால் ஒன்று புரிந்து கொள்ள முடிந்தது. உனக்கென்று சில கொள்கைகள் நீ வைத்திருக்கிறாய். நல்லது... என்னை எப்படி என்னால் மாற்றிக் கொள்ள முடியாதோ — அப்பொழுது உன்னை மாற்றிக் கொள்ளச் சொல்லி நான் கட்டாயப்படுத்தக் கூடாதுதான்... உன் வாழ்வு உன் மனதுப்படி மலர என் வாழ்த்துக்கள். ஒன்று மட்டும் நிச்சயம்... உன்னை மறக்க எனக்குச் சில நாட்கள் பிடிக்கும்... ஐ லவ் யூ ஸோ மச்!''

அவன் போன பிறகு மேகலாவிற்குத் தொண்டை அடைத்தது. விழிக்கடையில் நீர் கசிந்தது.

சே! என்ன பைத்தியக்காரத்தனம்! இத்தனை கோழையா அவள்? கௌதமனை நினைவில் கொண்டு வந்தாள்.

திங்கட்கிழமை மாலை அவனைச் சந்திக்கும்போது நடந்ததையெல்லாம் சொல்ல வேண்டும். விழுந்து விழுந்து சிரிப்பான்.

திங்கட்கிழமை காலைத் தபாலில் அவள் பெயருக்கு ஒரு தபால் வந்தது. கௌதமன்தான் எழுதியிருந்தான்.

''...தகுதிக்கு மீறிய இடத்தில் ஆசை வைக்கக் கூடாது என்று என் அம்மா அடிக்கடி சொல்வார்கள்... இப்போது எனக்குப் புரிந்துவிட்டது... போன வாரம் முழுவதும் — நீ அமெரிக்காவிலிருந்து வந்திருந்த தாடிக்காரனுடன் அடித்த கூத்தைத்தான் சொல்கிறேன். அந்த வெட்கக்கேட்டை நானும் பார்த்தேன். என் நண்பர்களும் சொன்னார்கள். உன் மேல் தவறில்லை. எதுவுமே சரி என்று உன் பணத்தைக் கொண்டு உன்னால் சாதிக்க முடியும். அந்த உலகம் என் தகுதிக்கு எட்டாதது. மனதிற்குப் பிடிக்காதது.

''நான் இரண்டு மாத லீவில் ஊருக்குப் போகிறேன். திரும்பி வரும் போது என் மாமா பெண்ணை மணந்து கொண்டுதான் வருவேன். அவள் ஒரு பத்தாம்பசலி. பட்டப்படிப்பு படிக்காதவள். 'வீடுதான் கோவில்; கணவன்தான் தெய்வம்' என்ற பழைய நம்பிக்கையில் ஊறியவள். மன விகாரம், பார்வைக் கோணல் ஏதும் நிச்சயம் வராது இல்லையா?

''உன் மனத்தில் நான் ஏதாவது நம்பிக்கையை வளர்த்திருந்தால் அது பற்றி நிச்சயம் நான் வருத்தப்படவில்லை. ஏனென்றால் உன்னால் எதையும் மறக்க முடியும், எதையும் எளிதில் ஜீரணிக்க முடியும் என் பதைப் போன வாரம் நேரில் பார்த்தேனே! குட்பை! கௌதமன்.''

கடிதத்தைப் படித்த மேகலா அப்படியே உறைந்து போனாள். பத்து நிமிஷங்கள் சென்ற பின்னர் சிந்தனை தெளிந்திருந்தது.

எதையும் தீர விசாரியாமல் 'சட்'டென்று ஒரு முடிவிற்கு வந்த கௌதமன் எங்கே? அத்தனை தூரம் மனத்தைப் புண்படுத்தியும் ''உன்னை மறக்க என்னால் சுலபத்தில் முடியாது'' என்று சொன்ன திலீப் எங்கே?

ஒரு முடிவுடன் தன் தந்தையின் அறைக்குள் நுழைந்தாள். அமெரிக்காவிற்கு டெலிபோனில் பேச, திலீப்பின் நம்பரைத் தேடினாள்.



# பிக்பாக்கெட்

**வே**ரிலே வெந்நீர் விட்டுப் பட்டுப் போக வைத்த பின்னர் அதைப் பச்சென்று செழிக்க வைத்துக் காட்டுகிறோம் என்று ஏதோ வித்தை பண்ணிக் காட்டியிருக்கிறார்கள்.

பின்னே என்ன சார்! கொஞ்சமாவது குற்ற உணர்வு இல்லாமல் காவியுடையில் கர்ப்பக்கிருகத்துக்குள் கத்திரியும் கையுமாய் நுழைந்து, சாமி கும்பிடும் பெண்களின் கழுத்து நகைகளைப் பக்குவமாகத் துண்டித்துப் போட, தரையோடு ஒட்டி வரும் சந்திரன் ஒவ்வொன்றாய்ப் பொறுக்கி ஜோல்னா பையில் போட்டுக் கொண்டு வெளிவந்த பிறகு இருவரும் வெற்றிப் பெருமிதத்தோடு, 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்,' என்று இண்டல் செய்து விட்டுப் போகிறார்கள். (இவ்வளவையும் கவனிக்காத அளவுக்கு அந்தக் கூட்டத்தினரிடையே பக்திப் பரவசம் முற்றிப் போய் விட்டதா என்பது வேறு விஷயம்.) இந்தப் பிக்பாக்கெட்டைக் கதா நாயகனாய் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காகச் சமுதாயப் பிரக்ஞை பாலிஷ் கொடுத்து என்னென்னவோ தகிடு தத்தங்கள் செய்திருக்கிறார்களே, அதுதான் கதை.

இந்த மாதிரி விளையாட்டுத்தன விளையாடல்களுக்கு சத்யராஜ் எடுத்த கை. ஏற்ற ஜோடியாய் ராதாவும் சிக்கி விட்டதால் லவ்விக் கொண்டு வேறு போய்விட்டார்.

பாங்கிலே மோசடி செய்து ராதா லாவிக் கொண்டு வரும் நோட்டுக் கற்றைகளைப் பிக்பாக்கெட் செய்து ச. ராஜ் பறித்துக் கொண்டு பாய, 'ஐயா... என் குடி முழுகிப் போயிடும்யா. என் தங்கச்சி கல்யாணமே இதை நம்பித்தான் இருக்குது. திருப்பிக் கொடுத்துடு,' என்று கெஞ்சிக் கேட்டு ராதா இடிந்து போய் உட்கார, அது நெஞ்சைத் தொட்டு விட்டது என்ற பாவத்தை முகத்தில் காட்டி, ரோந்து வரும் போலீசுக்குத் தப்பியோடி, கல்யாண வீட்டில் ராதா கொடுத்தனுப்பியதாய்ப் பணத்தைக் கொடுத்து, பிரமிப்புப் பாராட்டுச் செலுத்தும் ராதா முன், காதல் நெளிவு காட்டி... சத்ய ராஜமுத்திரை.

நிரட்சரகுட்சியான ராஜ். ராதா தயாரித்துக் கொடுத்த போலி சர்டிபிகேட்டைக் காட்டி, நான் பி. ஏ. தேறியவர் என்பதை நம்ப வைத்ததோடு மட்டுமல்ல; ஆங்கிலத்திலேயே பாடம் நடத்தும் எஸ். ஐ. டிரெய்னிங் பள்ளியில் முழுசாய் ஒரு வருடம் பயிற்சி பெற்று முதல் மாணவராயும் தேறி, டிபார்ட்மெண்ட்டே பாராட்டும் அளவுக்கு உத்தியோகம் பார்க்கிறாராம்! கேப்பையிலே நெய் வடிவதாய் நம்பச் சொல்கிற மாதிரி இல்லையோ?

ராதா கவர்ச்சியான பிக்பாக்கெட் கம் ஃபோர்ஜரி எக்ஸ்பர்ட். மானாவாரியாய் செண்டிமெண்ட்களும் லட்சியங்களும் சுமந்து கொண்டு திரிகிறார். இனம் இனத்தோடு என்னுமாப்போலே பிக்பாக்கெட் ராஜுடன் இணை சேர்ந்தது சரி. அவரைக் காவல் அதிகாரியாக்க வேண்டுமென்று ஒரு லட்சியத்தை வரித்துக் கொண்டது விபரீத வேடிக்கை.

இருவரின் காதல் காட்சிகளில் இதமான குளுமை பரவுவதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

படத்துக்குள்ளே சில்க் சுமிதா பசக்கென்று ஒட்டிக் கொள்கிறார். ஆரம்பத்தில் சிவப்பு விளக்குப் பகட்டாய்ச் சொக்குப்பொடி போடும் போதும் சரி, காக்கி உடுப்பின் நிமிர்வில் காவிகளைப் புரட்டி எடுக்கும் மிடுக்கிலும் சரி, காதல் தோல்வி ஏற்பட்டதாய் நினைத்து சத்யராஜ் 'தண்ணீரில்' மிதக்கும்போது, தன் கதையை விவரித்து அவரைத் திருப்பும் பாங்கிலும் சரி, கடைசியாய் சத்யராஜுக்காகச் சிபாரிசு செய்யும் உருக்கத்திலும் சரி — அடேயப்பா, சிலுக்கிடம் இப்படியொரு குணச் சித்திரம் ஒளிந்திருக்கிறதா?

இருகோடுகள் டெக்னிக்கில் வில்லன் விகவத்தை வல்லாள கண்ட வில்லனாக்கி அவரை மடக்கும் குட்டி சமூக விரோதியை உயர்ந்தவனாகச் செய்யப் பாடுபட்டிருக்கிறார்கள். அதற்காகச் சிறிய குற்றங்களை மன்னித்து விட முடியுமா என்ன?

பெரிய அளவு கூட்டம் சேர்த்துச் செழுமையான செட்டிங்குகளை நாட்டி வாரியிறைத்திருந்தாலும், பார்க்கிறவர்களுக்கும் பகுத்தறிவுக்கும் சம்பந்தமில்லை என்கிற ரீதியில் படம் பண்ணி ரொம்பத்தான் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

**— பி. எஸ். எஸ்.**

# விளக்கு

அனுராதா ரமணன்

சந்நிதிக்குள் நுழைந்தவுடன் ராஜம்மா பாட்டியின் கண்கள் — சர விளக்கில்தான் போய் நிலைகுத்தும்.

''சுப்பிரமணி... விளக்கு எல்லாத்துக்கும் எண்ணெய் விடவில்லையா...''

''விட்டேனே..''

''பின்னே, கோடி ரெண்டு விளக்குகள் எரியவே இல்லையே? கிழவி எங்கே ஸ்டூல் போட்டு ஏறிப் பார்க்கப் போறாங்கற நினைப்புத்தானே?''

''ஈசுவரா... நான் வேணுமானா ஸ்டூல் கொண்டு வந்து போடறேன். ஏறிப் பாருங்கோ. எண்ணெய் தளும்பறது. காத்துல அணைஞ்சிடுத்து.''

''ஏத்திட்டு, தீபாராதனை காட்டு.''

சுப்பிரமணியத்துக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. ஆனாலும் அவர், வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லவில்லை.

என்னத்தைச் சொல்வார்?

பெருங்காய டப்பாவுக்குள் அடக்கி விடலாம் போல் சின்ன ஊர். இருப்பது ஒரேயொரு சிவன் கோவில். பெருமாள் பரவாயில்லை. 'எங்கே இந்த ஊருக்குள் இருந்தால் — சிவனைப் போல, தானும் வெண்கலப் பானைச் சோற்றுக்குக் கூட வழியில்லாமல் ராஜம்மா கையை எதிர் பார்க்க வேண்டி வருமோ என்கிற உதற லில் டவுன் பக்கமாய்ப் போய் உட்கார்ந்து விட்டார்.

ராஜம்மா கிழவியிடம் மாட்டிக் கொண் டது சிவன் மாத்திரமில்லை. சுப்பிரமணிய குருக்களும்தான்.

ராஜம்மா, குருக்கள் விளக்கேற்றுவதை நின்று, நிதானித்துப் பார்த்து விட்டு, கர்ப் பக்கிரஹமும் கண்ணில் படுகிற மாதிரி, ஒரு தூணில் சாய்ந்து உட்கார்ந்தாள்..

இப்பொழுது உட்கார்ந்தால், இரவு ஒன்பதரை மணிக்கு அர்த்தஜாம பூஜை ஆகிற வரையில் நகர மாட்டாள்.

கோவிலுக்கு வந்து போகிற ஜனங்களை எல்லாம் நிறுத்தி வைத்து இரண்டு வார்த்தை அதில் கண்டிப்பாய் ஒரு வார்த்தை — கோவி லுக்குத் தன் கணவனின் முன்னோர்கள் செய்த திருப்பணிகளைப் பற்றி இருக்கும்.

''என்னடி.. கல்யாணிக்கு எப்ப பிர சவம்? நம்ப கோவில் அம்பாளுக்குப் பூப் பாவாடை சாத்தறேன்னு வேண்டிக்கோ. எங்க மாமியார், என் வீட்டுக்காரரை நல்ல படியாப் பெத்துப் பிழைக்கணும்னு அம்பா ளுக்குத் தங்க ஒட்டியாணம் செஞ்சு போட றதா வேண்டிண்டாளாம். இப்ப இருக்கிற ஒட்டியாணம், என் மாமியார் போட்டது தான்!''

''டேய்.. கோடி வீட்டு ராமையா பேரன் தானேடா நீ.. அதோ பாரு... நிலை விளக்கு எண்ணெயில்லாமப் படம் திரியறது. கொஞ் சம் எண்ணெய் எடுத்து விடு. இந்த சுப்பிர மணியம் வாங்கித் தர்ற எண்ணெயை விளக் குக்கு விடறானா... இல்லே, வீட்டுல அப்பளம் பொரிக்க எடுத்துண்டு போயிட றானான்னு தெரியலே.

''இந்த நிலை விளக்கு, சர விளக்கு, மயூர விளக்கு — எல்லாமே எங்க மாமியார் வாங்கி வச்சது. உன்னாலே புதுசா எதுவும் கைங்கரியம் செய்ய முடியலைன்னாலும் இருக்கிற விளக்குக்கெல்லாம் மூணு காலமும் தவறாமல் எண்ணெய் விடுடி ராஜம், போதும்னு சொல்லியிருக்கா. என் மூச்சு நின்னாலும் சுவாமி கைங்கர்யம் நின்னுடக்கூடாது. தொடர்ந்து நடந்துண்டே இருக்கணும். அதான் என் ஆசை.

ராஜம்மா, இதே வார்த்தையை — சுப்பிர மணியக் குருக்களின் தாத்தா காலத்தி லிருந்து சொல்லி வருகிறாள்.

கிழவிக்கு என்ன வயசிருக்கும்?

விடிகாலைக் கருக்கலில், ஈரப் புடைவை தடுக்க, குடலை நிறையப் பூக்களைக் கொண்டு வந்து வைத்துக் கொண்டு கோவில் வாச லில் இவள் பழி கிடப்பதைப் பார்த்தால் இருபது வயசோ என்று நினைக்கத் தோன் றும்.

உச்சி வெய்யிலில், பகல் பூஜையைப் பார்த்து விட்டு, காலில் செருப்பு இல்லா மல், பொரிகிற மணலில் கால் பதித்து இவள் வீட்டுக்கு ஓடுவதைப் பார்த்தால் பாவாடை கட்டிய சிறு பெண் போலத் தோன்றும்.

இரவில்... கண்ணும் தெரியாது; காதும் கேட்காது. யாராவது ஒருத்தர் துணை வேண்டும்.

''யார்ரீ அது.. சுப்புணி பொண்ணு சியாமளாவா? என் வீட்டைத் தாண்டித் தானே போகணும். சித்த கூட வாடி. கண்ணு மசமசங்கறது. ஈசுவரா, மகா தேவா... இன்னும் எத்தனை நாளைக்கு இந்த சோதனை?''

சோதனை, சோதனை என்பாளே தவிர ராஜம்மாவுக்குச் சாவு என்றால் பயம்.

பதினைந்து வயசில் அந்த ஊரில், மடிசார்ப் புடைவையைக் கட்டிக் கொள் ளக் கூடத் தெரியாமல் அடியெடுத்து வைத்த வள் ராஜம்மா.

பதினாறாம் வயசிலேயே புருஷனைப் பறி கொடுத்தாள்.

ராஜம்மாவின் மாமியாருக்கு அந்த ஊர் அம்பாளுக்கு ஒட்டியாணம் செய்து போட்டு ஒரு பிள்ளை பெற்றுக் கொள்ள முடிந்தது. அது என்னவோ, ராஜம்மாவுக்கு அம்பாளை வசம் பண்ணிக் கொள்ளத் தெரியவில்லை.

எண்பத்தியைந்து வயசாகிறது. நேற்று என்ன சமையல் என்பது மறந்து போகிறது.. பதினைந்து வயசில், தாலியும் கூறையுமாய் அந்த வீட்டுப் படியை மிதித்த போது, கணவன் தன் உள்ளங்கையில் கிள்ளியது

இன்னும் பசுமையாக நினைவில் இருக்கிறது.

பாவி மனுஷன்... எதுக்காக என்னை அழைச்சுண்டு வந்து இங்கே கொண்டு வந்து விட்டுட்டுப் போனார்...'

'சிவன் கோவிலுக்கு விளக்கேத்தவா..'

இத்தனைக்கும் பெரிசாய்ச் சொத்து சுகம் எதுவுமில்லை. ஊருக்குள் பதம் தவறிய மைசூர் பாகு மாதிரி 'பொல பொல'வென உதிர்ந்த நிலையில் ஒரு வீடு. அவள் வயிற்றுக்குத் தாராளமாய்க் கண்டு சிவன் கோவில் விளக்குகளுக்கும் ஆகிற மாதிரி நெல் மூட்டை. எள் ஆடி வரும் எண்ணெய்..

கொட்டிலில் இரண்டு பசு...

ராஜம்மாவின் தனி சாமர்த்தியத்தினால் தான் இதற்குள் இதுநாள் வரையில் காலம் தள்ள முடிகிறது.

ஓரோர் சமயம் கோபம் வரும். இயலாமையினால் வரும் கோபம்.

அம்பாளைத் திட்டித் தீர்ப்பாள்.

''ஏண்ம இப்படி என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கறே? பதினாறு வயசுலேயிருந்து உனக்கு விளக்கேத்திண்டிருக்கேனே... பதிலுக்கு எனக்கு நீ என்ன செஞ்சே?''

இப்படியொரு மூளிக் கோபம் வந்தால் சாயந்திரம் பூஜை மணி அடிக்கும் வரையில் வாசல் திண்ணையிலேயே சிடுசிடுவென உட்கார்ந்திருப்பாள்.

மணியடிக்கும் வரையில்தான்...

அதுதான் கண்டாமணியின் ஒவ்வொரு அடியும் 'கோபமா ராஜம்மா.. கோபமா ராஜம்மா' என்று அவளைக் கேட்குமே.. அதற்கு மேல் இருப்புக் கொடுக்குமா.. தூக்குப் பாத்திரத்தில் எண்ணெயும், மரத்தாலான கரண்டியையும் தூக்கிக் கொண்டு ஓடி விடுவாள்.

''டேய் அம்பி... அந்த மேல் விளக்குல எண்ணெய் இல்லே போல் இருக்கு. விடுடா..''

''ஏன் பாட்டி.. அந்த ஒரு விளக்கு எரியலையின்னா என்ன... அதான் இத்தனை விளக்குங்க எரியுதே...''

''போடா மக்கு... தினமும் குளிக்கிறியே.. மூஞ்சி தேய்க்காமல் குளிியேன். அது மாதிரி தான் இதுவும்.''

ராஜம்மாவைக் கண்டாலே ஊர்ப் பெண்கள் பயந்து ஓடுவார்கள்.

''கிழத்துக்கு வேறே வேலை இல்லே.. நம்ம வாயைப் பிடுங்கும்.''

சுப்பிரமணியக் குருக்கள்தான் மாட்டிக் கொள்வார்.

''சுப்புணி.. பொண்ணுக்கு வரன் பார்க்கறியா...

''பார்த்துண்டேதான் இருக்கேன். அம்பாள் கண்ணைத் தொறக்கலையே...''

''ஏண்டா?''

''குறைஞ்சபட்சம் ஒருவேளைச் சோறு போட்டு, மேளம் கொட்ட வேண்டாமா?''

''சிவன் சொத்தைத் திங்கலையே..''

''சிவ சிவா... ஏன் பாட்டி உங்களுக்கு இத்தனை சந்தேகம்? திங்கற மாதிரியா நம்ம



## கலர் டி. வி. பரிசை மறந்து விடாதீர்கள்!

கல்கியில் வெளியாகும் டி. வி.—வீடியோ பக்கங்களுக்கு உங்கள் அனுபவங்களை எழுதுங்கள். டி. வி.—வீடியோ தொடர்பாக நீங்கள் எழுதுவது ரத்தினச் சுருக்கமாக இருக்க வேண்டும்; வாய்விட்டுச் சிரிக்க வைக்க வேண்டும். விமர்சனங்களும் எழுதலாம்.

ஒரேயொரு நிபந்தனை — நீங்கள் அனுப்பும் துணுக்கு அல்லது விமர்சனத்துக்கு மேல் புறம், மிக அண்மையில் வெளியான கல்கி இதழின் தலையங்கப் பக்கத்திலிருக்கும் தேதிப் பகுதி (மூன்று வரிகள்)யை மட்டும் கத்திரித்து ஒட்டியனுப்ப வேண்டும் என்பது தான்.

பிரசுரமாகும் ஒவ்வொன்றுக்கும் ரூ. 25 பரிசு. பிரசுரமாகும் அனைத்துக்கும் வரிசை எண் தரப்பட்டு, இன்னும் ஒன்றரை மாதங்கள் சென்று குலுக்கல் முறையில் ஒருவருக்குக் கலர் டி. வி. பரிசு! உடனே எழுதுங்கள்.

— ஆசிரியர்.

கோவில் நிதி நிலைமை இருக்கு? ஏதோ உங்களைப் போல பெரிய மனுஷா அவாளா பார்த்து ஏதாவது கொடுத்தாத் தான் உண்டு!''

''அதானே கேட்டேன்?''

ராஜம்மா அழுத்தமாய்ச் சொல்லுவாள்.

இரவு வீடு திரும்புகையில் மாத்திரம் இதே சுப்பிரமணியத்தின் மகள் சியாமளாவின் துணை வேண்டும் கிழவிக்கு.

''சித்த இருடி.''

''........

''இந்த ஆவணி வந்தா இருபத்தியெட்டு வயசு முடியறதாடி உனக்கு?''

''......

''அந்த நாளுல பதினஞ்சுல பொண்ணைப் பெத்து, முப்பது வயசுக்குள்ள மாப்பிள்ளை வந்தாயிடணும். எனக்கு பதினஞ்சுல கல்யாணம். எங்கம்மாவுக்கு இருபத்தியொம்பதே முடியலே..''

ராஜம்மாவின் மனசுக்குள் குருட்டு நினைப்பு எழும்.

முப்பது வயசில் திருமணமான பெண்ணின் உள்ளங்கையில் புருஷன்காரன் இன்னினால் கிளுகிளுப்பு இருக்குமோ?

என்ன இருக்கும்? பிறந்த வீட்டிலேயே பாத்திரம் தேய்த்து, இட்லிக்கு அரைத்து ரேகையே அழிந்து போயிருக்கும். இதில் கிளுகிளுப்பாவது ஒன்றாவது?

ராஜம்மா இப்பொழுது கூட இருட்டில் தட்டுத் தடுமாறிச் சியாமளாவுடன்தான் வீட்டுக்கு நடக்கிறாள்.

''ஏன் பாட்டி... ராத்திரி இத்தனை நேரம் கழிச்சுப் போய்ச் சிரமப்படறேள்.. பேசாம, சாயந்திரமே சட்டுப்புட்டுனு சுவாமி தரிசனத்தை முடிச்சுக்கோங்களேன்.''

''விளக்கேத்திப் பார்க்கணுமே...''

சியாமளாவுக்கு என்ன தோன்றியதோ 'வெடுக்'கெனச் சொன்னாள்;

''ஒரு விளக்கு எரிஞ்சா என்ன... ஒம்பது விளக்கு எரிஞ்சா என்ன... எண்ணெய் விக்கிற விலையில...''

''உன் புத்தி இப்படி இருக்கிறதுனால தான்டி வர்ற வரனெல்லாம் தட்டிப் போறது.''

''போகட்டும் பாட்டி... பதினாறு வயசுலேயிருந்து எண்பத்தியஞ்சு வயசு வரைக்கும் எத்தனை டின் எண்ணெய் விட்டு விளக்கேத்தியிருப்பேள்... அதனால் உங்க மனசு வெளிச்சமாச்சோ? இருட்டாத்தானே கிடக்கு...''

கிழவி பிரமித்து நின்று விட்டாள்.

''என்னடி சொல்றே?''

''நீங்க ஏத்தறது விளக்கில்லே பாட்டி, தீவட்டி. ரெண்டும் வெளிச்சத்துக்குத்தான். ஆனா தீவட்டி, இருட்டைப் போக்க. விளக்கு அதுக்கு மேல ஒரு படி போய் — ஞானத்தைக் கொடுக்க. கோவில் பிரகாசமாயிருந்து என்ன பிரயோசனம் பாட்டி. சாமி அங்கே இல்லே. இருந்தா தனக்கு பூஜை செஞ்சே உடம்பு தேயற குருக்கள் பொண்ணுக்குக் கண் திறந்து பார்க்க மாட்டாரோ..

பொட்டிலடித்தாற் போல நின்று விட்டாள் ராஜம்மா.

'இப்படிக் கூட ஒரு பொண் நினைக்குமோ?'

'ஏன் நினைக்காது? ஊருக்குப் பெரிய மனுஷியா ஜடாயு மாதிரி உட்கார்ந்திருக்கேன். பொண்ணுக்குப் பொண் இந்த வருத்தம் கூடத் தெரியலையே..'

ராஜம்மா திரும்பிப் பார்ப்பதற்குள் சியாமளா அழுது கொண்டே ஓடி விட்டாள்.

மறுநாள் —

ராஜம்மாவைப் பார்த்ததும் — ஸ்டூலை நகர்த்திப் போட்டுக் கொண்டு சர விளக்கில் எண்ணெய் ஊற்றக் குருக்கள் முயல —

ராஜம்மா கரகரத்த குரலில் சொன்னாள்:

''பெரிய விளக்கு ஒண்ணு எரிஞ்சா போதும்டா சுப்புணி..

''ஏன் பாட்டி?''

''சுவாமி வெளிச்சத்துலதான் இருக்கார். நாமதான் இருட்டுல இருக்கோம். இனிமே, எண்ணெய் ஆடி வர்ற பணத்தோட நெல்லு வித்த பணத்துலேயும் மிச்சம் பிடிச்சுத் தர்றேன். சியாமளா கழுத்துல மூணு முடிச்சு விழட்டும்.''

''பாட்டி...''

''இதுதான்டா நிஜ விளக்கு. இது தெரியாம நானும் எத்தனை எண்ணெய்.. எத்தனை பணத்தை வீணடிச்சிருக்கேன். அம்பாளும் லேசுப்பட்டவ இல்லே. எனக்கு ஞானம் பொறக்கணும்கறதுக்காகத்தானே இத்தனை வருஷமும் எண்ணெய்த் தூக்கும் கையுமா என்னை அலையவிட்டிருக்கா?''

சுப்பிரமணியம் தன் முன் எரியும் ஒற்றைச் சுடர் விளக்கைப் பார்த்தார். அதன் பிரகாசம் உள்ளம் முழுதும் சந்தோஷ ஒளியை நிரப்ப... ராஜம்மாவைத் திரும்பிப் பார்த்தார்.

அவளே ஒரு பெரிய விளக்காய் நின்றாள்!

# பாலின் சத்து
# ட்ருவின் அன்பு




சிறந்த பொருட்களைக் கொண்டு அன்புடனும்
அக்கறையுடனும் தயாரிக்கப்படுவது

அத்தியாயம் 13

## 'மாப்பிள்ளை' வந்தார்!

மூதல் அபாயச்சங்கு ஒலிக்க ஆரம்பித்தது. தாமரை வந்து கொண்டிருந்தாள். சிட்டுவுக்கு ஜுரம் கண்டது போல் இருந்தது. தென்னவன் தலை மெல்ல உள்ளே இழுத்துக் கொண்டது.

''வர்றேன்னு சொல்றதுக்குள்ளே உங்க அப்பாவுக்கு அவசரம்டி! பாவாட சாமி வீட்ல இருந்து ஆள் விட்டு அனுப்பிச்சிட்டாரு! உம்... நாளைக்கு உனக்கு விசேஷம். ஏன் சிட்டு.... ஊரை விட்டுப் போன உடனே எங்களை எல்லாம் மறந்துடுவியா?'' தாமரை சொன்னாள்.

''நீ என்னடி சொல்றே தாமரை?'' சத்தமாகக் கேட்டாள். அது தென்னவனையும் தீண்டியது.

''ஏன்டி இப்படிக் கத்தறே? நான் என்ன செவிடா? அந்தத் தென்னவனோட பேச்சுக் கேட்டுக் கேட்டு உனக்கும் தொண்டை எட்டு ஊருக்குப் பெரிசாயிடுச்சி...!''

''கேட்டதுக்குப் பதில் சொல்லு... என்னைச் சமாதானம் பண்றது அப்புறம்!''

''எதையும் சொல்லக் கூடாதுன்னு உங்க அப்பா உத்தரவு... கோழி கூவுற நேரத்துல விஷயம் உன் காதுல விழாமயா போயிடப் போவுது! வா, வந்து படு சிட்டு.''

தன் கதை 'சோகக் கதை'யாகி வருவது சிட்டுவுக்குத் தெரிந்தது. தென்னவன் மீது எரிச்சலாக வந்தது. சரியான முழு பூசணிக் காயைச் சோத்துல மறைக்கிற ஆளு... இங்க இருந்து போவ வேணாம்! என்னமோ மாமனார் வீட்டுக்கு வந்த மாதிரி இல்ல மல்லுக் கட்டிக்கிட்டு ஒளிஞ்சுக்கிட்டுக் கெடக்கிறாரு!'

''வா... சிட்டு. கொஞ்ச நேரம் தூங்கினாத் தான் மொகம் காலைல களையா இருக்கும். இல்ல... பொண்ணு பாக்க வர்றவங்க முன்னால தூங்கி வழிவே...!''

தாமரை நாக்கைக் கடித்துக் கொண்டாள். அவளிடம் தமிழ்முரசு சொல்லியே அனுப்பி இருந்தார். 'விஷயம் விடிஞ்ச உடனே தெரிஞ்சாப் போதும்... நானே சொல்லிக்கிறேன்... நீ சொல்லி அவளை எதுவும் குழப்பிடாதே...'' சொல்லி விட்டான்.

''தாமரை!!''

சிட்டுவின் வார்த்தைகளில் கோபம் தெறித்தது. தாமரை பயந்தே விட்டாள். சட்டென எழுந்து உட்கார்ந்து கொண்டு அவளை ஒரு மாதிரியாகப் பார்த்தாள்.

அக்குரலால் தென்னவனுக்குக் கூட உடம்பு ஆடியது. பூனை மெல்லக் கத்தியது.

''அது... வந்து சிட்டு...!''

''என்னைப் பொண்ணு பாக்க வராங்க! இது அப்பா செஞ்சிருக்கிற ஏற்பாடு இல்லே! இது ரகசியம்.. அதானே?''

சத்தமாய்க் கேட்டாள். ஏற்கெனவே தென்னவன் காதுகளைக் குவித்திருந்தான்.

''ஆமா சிட்டு! நல்ல காரியத்தைக் கேட்டு வெட்கப்பட்டுச் சந்தோஷப்படுவேன்னு

# என் உயிர்த் தோழன்



பாத்தா, என்னமோ பேயறைஞ்சாப் போல ஆயிட்டே!''

''நான்தாம்மா சொல்லாதேன்னேன்... அவளை ஒண்ணும் சத்தம் போடாதே!'' அப்பா வந்து சேர்ந்தார்.

''அப்பா... யாரைக் கேட்டு இதைச் செஞ் சீங்கப்பா?'' அப்பாவை அதிகாரத்துடன் கேட்டாள். தாமரைக்குச் சிட்டுவின் போக்கு அதிர்ச்சியாக இருந்தது.

''பெத்தவன்மா... யாருகிட்ட எதெதைக் கேட்கணும்... எப்பப்பச் செய்யணும்னு ஒரு வரம்பு இருக்கு. நீ போயி படு போ!''

''அப்பா!'' சிட்டுவின் வார்த்தையில் அன்பைத் தாண்டி என்னைப் புரிந்து கொள்ள மாட்டீர்களா என்கிற பாவமும் இருந்தது.

அவர் முதல் முறையாக மகளைப் பார்த்துக் கடுமையாகப் பேசினார்.

''சிட்டு... விவகாரம் பண்ணிக்கிட்டிருக் காதே! நாளைக்கு நடக்கப் போறது சந்தனத் தேவன் பட்டிக்கே ஒரு சந்தோஷமான விஷயம். இதுல இந்த அப்பனோட திருப்தியும் இருக்குதும்மா. புரிஞ்சுக்க. போய்ப் படு!''

தன்னைப் பற்றிப் புரியாதவர்களுக்கு மத்தியில், தான் முற்றுகை இடப்பட்டு விட் டதை உணர்ந்தாள் சிட்டு. பரணில் தென்ன வன் வியர்வையைத் துடைத்துக் கொண் டான்.

அவனைப் பார்க்க முடியாது. போக வழியும் இல்லை. முடிவு எடுக்கக் கூடிய மனமும் அவளிடம் பலவீனமாகி இருந்தது. என்ன செய்யலாம், எதைச் செய்யலாம். மனக்கரைக்கு வந்த நினைவுகள் தரைதட்டி உடைந்தன.

கிழக்கு வானத்தின் இமைகள் மெல்லத் திறந்து கொண்டிருந்தன.

சிட்டு இமையை மூட மறந்திருந்தாள்.





மாப்பிள்ளை வீட்டார்: "பெண்ணுக்கு முப்பத்திரண்டு பல்லும் இருக்கா?"

பெண்ணின் தந்தை: "சே! இப்படிக் கூடச் சந்தேகப்படுவாங்களா! வேணும்னா பல் செட்டைக் கழற்றித் தரச் சொல்றேன். எண்ணிப் பார்த்துக்குங்க!"

— நீடாமங்கலம் ஜே.பி.



தூங்கிக் கொண்டிருந்த தாமரையைக் கொட்டக் கொட்டக் கண் விழித்துப் பார்த்துக் கொண்டே இருந்தாள்.

அப்பா இரவில் பத்து நிமிஷத்திற்கு ஒரு முறை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக வந்து நடமாடிக் கொண்டே இருந்தார்.

தென்னவனைத் தப்பிக்க வைக்க வேண்டும் என்ற எண்ணம் தப்பிப் போயிருந்தது. தென்னவன் தூங்கி இருந்தான். அந்த இடத்தை ஒரு குடில் போல நினைத்திருந்தான். பூனை சற்று அனுசரணையாகி இப்போது அவன் காலடியில் கிடந்தது.

**சி**ட்டுவின் முகம் களைப்படைந்திருந்தது. சுத்தமாகத் தூக்கமில்லை!

ஆட்கள் வர ஆரம்பித்தனர்.

"அய்யா வீட்ல விசேஷம் — முடிஞ்ச கையோட சாப்பாடு...!"

"ஜோதிபுரத்துக்காரரா.... மாப்பிள்ளை! நல்ல எடம் நல்ல மனுசங்க! அய்யா லக்கணத்துக்கு எல்லாம் நல்லா அமையும் ஆமா!"

சிட்டு பரண் பக்கம் போன போது, தென்னவனைக் காணவில்லை.

"யோவ்!" கூப்பிட்டே விட்டாள். தென்னவன் நித்திரையில் இருந்தான்.

"கூப்பிட்டீங்களாம்மா?" — அருகில் வேலை செய்து கொண்டிருந்த ஆள் வேகமாக ஓடி வந்தான். கட்டு மஸ்தானாய்த் தேக்கு போல இருந்தான்.

"என்னம்மா... கீழ்வேலை எல்லாம் முடிச்சிட்டோம்... அப்புறமா பரணையும் மத்த வேலைகளையும் பாக்குறோம்...!" அந்த முந்திரிக் கொட்டையின் வார்த்தைகளில் சிட்டுவுக்கு மூச்சுத் திணறியது.

"பரணிலே எல்லாம் நான் சொல்லாம நீங்க யாரும் ஏற வேணாம்! அந்த அறையை மட்டும் சுத்தம் பண்ணு...! கேக்குதாய்யா!"

அவன் விசித்திரமாய் அவளைப் பார்த்தான். சிட்டுவை அலங்கரிப்பதற்காக மற்ற பெண்கள் ஓடி வந்து சிட்டுவை இழுத்துக் கொண்டு ஓடினர்.

**த**மிழ் முரசு நீராடிப் புத்தாடை உடுத்தி நெற்றியில் விபூதி சந்தனப் பூச்சுக்களுடன் இருந்தார். பரபரப்புடன் நடந்தார்.

சிட்டு வெறித்துப் போய், உட்கார்ந்திருந்தாள். அவள் உடம்பைக் 'குத்தகை' எடுத்தது போல் ஆளுக்கு ஓர் அலங்காரம் செய்வதில் ஈடுபட்டிருந்தனர்.

சமையல் ஒருபுறம் தயாராகிக் கொண்டிருந்தது.

தன் 'மனப் பரணில்' குதித்துக் கொண்டிருக்கும் தென்னவனை நொந்தாள். 'ஏய்யா வந்தே?' தான் இருதலைக் கொள்ளி எறும்பாய் இருக்கும் விஷயத்தை இங்கு யாருக்குச் சொல்லி என்ன பயன்...?

**வி**ழித்துக் கொண்ட தென்னவன் கையில் பூனை இருந்தது. அது பழகி விட்டது. தன் நிலையை அதனிடம் சொல்லி அவளிடம் தூது அனுப்பலாமா என யோசித்தான். இந்தப் 'பூனை விடு தூது' எந்த அளவுக்கு வெற்றி அடையும். அவன் சட்டையில் தென்பட்ட மீன் குழம்பு வாசனையை அது முகர்ந்தது. எதுவும் கிடைக்கவில்லை என்ற ஏமாற்றத்துடன் பார்த்தது. கத்தியது.

அந்தச் சின்ன மணியை ஒரு சணலில் கோத்து மெல்லப் பூனையின் கழுத்தில் கட்டிவிட்டான். பக்குவமாக அதை இறக்கி விட்டான்.

அந்த விலங்கு அவனுக்காக அவளிடம் பேச விரைந்து கொண்டிருந்தது. முதலில் சமையலறையில் நுழைந்தது. அடித்து விரட்டப்பட்டது.

தென்னவன் அங்கிருந்த ஒரு சல்லடையை எடுத்துத் தனக்கு முன்னால் வைத்துக் கொண்டு அந்த ஓட்டைகள் வழியே உற்றுப் பார்த்தான்.

"சிட்டு... இந்தப் பூனைக்கி யாரோ மணியைக் கட்டி விட்டிருக்காங்க. என்ன சத்தம் வரல்லியேன்னு பார்த்தா உள்ளே நாக்கு இல்லே...!"

சட்டெனச் சிட்டு பூனையை வாங்கிக் கொண்டாள். அவளுக்கு இதயம் அடித்துக் கொண்டது. மணியினுள் ஒலித்த தென்னவனின் மௌனம் அவளுக்குக் கேட்டது. ஓடினாள். உடனே அந்த நாக்கை எடுத்து அதில் மாட்டி விட்டாள். பூனை ஓடியது.

பரணுக்குக் கீழே வந்து நின்ற பூனை பரிதாபமாகப் பார்த்தது. மேலே வருவதற்கு வழி தெரியவில்லை. இப்போது பூனையின் கழுத்தில் மணி இல்லை. எங்கோ அறுந்து விழுந்திருந்தது. தென்னவன் சைகைகளை அது கவனிக்கவில்லை. சுற்றிக் கொண்டே இருந்தது.

"சம்பந்தி வீட்டுக்காரவங்க வந்துட்டாங்க!" — குரல் கேட்டது.

தமிழ்முரசுவோடு இருந்த ஊர்ப் பெரியவர்கள் ஆரவாரத்துடன் வரவேற்றனர். தமிழ்முரசுவை எல்லோரும் வணங்கினர்.

"கோயிலுக்குள்ளே நுழையற மாதிரி இருக்கு!" — மாப்பிள்ளையின் அப்பா வாசலிலேயே நெகிழ ஆரம்பித்து விட்டார். மாப்பிள்ளை வெட்கத்துடன் அம்மா அருகி

லேயே வந்து கொண்டிருந்தார்.

சோதிபுரத்தின் வேஷ்டிகளும், புடைவைகளும் உள்ளே நடைபயின்று கொண்டிருந்தன.

தமிழ்முரசு எல்லோரும் அமர்ந்தவுடன் மெல்ல நிம்மதிக்கு வந்தார்.

சோதிபுரத்துக்காரர் அவரை உட்காரச் சொல்லி அடம் பிடித்தார். இல்லை என்றால் தான் எழுந்து நிற்கப் போவதாகவும் அடம்பிடித்தார். அவரின் செய்கைகள் வேடிக்கையாக இருந்தன. அவர் மனைவிக்கு வெட்கமாக இருந்தது.

"இருங்க... எல்லாம் ஏற்பாடு பண்ணிட்டு வந்துடறேன்... முதல்ல காப்பி ஏதாவது சாப்பிடறீங்களா?"

"உங்க வீட்ல கால் வச்ச உடனே எங்களுக்குக் கை நனைச்சாப்புல ஆயிடுச்சி. முதல்ல நீங்க உட்காருங்க!"

மாப்பிள்ளை மணமகளைப் பற்றிய வண்ணக் கனவுகளில் வெட்கத்துடன் இருந்தார். தரையை அவர் விரல்கள் கொத்திக் கொண்டே இருந்ததில் அவர் மனம் ஆனந்தமாய் அவரைத் தொந்தரவு செய்து கொண்டிருப்பது தெரிந்தது.

தாமரை திருட்டுத்தனமாக மாப்பிள்ளையைப் பார்த்து விட்டாள். அவளுக்குப் பிடித்துப் போயிற்று. சிட்டுவிடம் ஓடி வந்தாள்.

"சிட்டு... ரொம்ப நல்லா இருக்காருடி...! நாம ரெண்டு பேருமே சேர்ந்து கட்டிக்குவோமா?"

எல்லோரும் சிரித்தனர்.

சிட்டுவின் மனவலி அவள் கண் ஓரங்களில் ஈரமாகி இருந்தது.

அவள் பார்த்துக் கொண்டிருந்த கண்ணாடியில் தென்னவனே தெரிந்தான். அந்த பிம்பத்தையும் அவளால் அகற்ற முடியவில்லை.

பொம்மலாட்டப் பொம்மையாய்த் தான் ஆகி இருப்பதை உணர்ந்தாள். இனிமேல் நடக்கப் போவது நாடகமா? ஒத்திகையா? இல்லை 'வாழ்க்கை ஒப்பந்தம்'. சம்பந்தமே இல்லாத ஒருவனோடு தன்னை எழுதித் தரப் போகும் அடிமைச் சாசனம். இது அப்பாவிற்கு முடிக்க வேண்டிய கடன். தன் 'மனச் சுழலில்' தானே சிக்கித் தவிப்பதை உணர்ந்தாள்.

**மா**ப்பிள்ளையைக் கவனித்தான் தென்னவன்.

அவன் அசட்டுச் சிரிப்பு, யாரைப் பார்த்தாலும் முகத்தில் ஏற்படுத்திக் கொள்ளும் ஆச்சரியம். தென்னவனுக்கு அவனைப் பார்க்க என்னவோ போல் இருந்தது.

பூனை எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தது. அந்த மணி சிட்டுவின் அறை வாசற்படியில் விழுந்து கிடந்தது.

தமிழ்முரசு வந்தவர்களிடம் பேசிக் கொண்டிருந்தார்.

தன் பிறப்பிலிருந்து பரிணாம வளர்ச்சி வரை சொன்னார். மகளுக்கு என்னென்ன செய்யப் போகிறார் என்பதை ஒரு குறுநில மன்னரைப் போல் சொல்லிக் கொண்டிருந்தார். அவரின் 'இலக்கியம்' இந்த நேரத்தில் அவர்கள் மத்தியில் பெரிய பிரமிப்பை ஏற்படுத்தி இருந்தது.

"பொண்ணைப் பார்த்துடலாமா?" — விட்டால் சோதிபுரத்துக்காரர் பையனை அழைத்துக் கொண்டு சிட்டுவின் அறைக்குப் போய்ப் பார்த்து விட்டு வந்து உட்காருவார் போலிருந்தது!

மனைவி அவரின் பரபரப்புக்களை அடக்கினாள். ரகசியமாய்ப் பேசினாள். "நீங்க சம்பந்தியாகப் போறவரு... நிமிர்ந்தே உட்காருங்க!"

**எ**ல்லோரும் சிட்டுவைப் பார்க்க அந்தத் திசை நோக்கி ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

வாசல் தாண்டிய சிட்டுவின் காலடி பட்டுச் சத்தம் போட்டு அந்த மணி உருண்டு ஓடியது. நின்றாள். தோழிகள் அவளை நகர்த்தினர்.

எல்லோரும் ஆவலுடன் அவள் மீதே பார்வையை வைத்திருந்தனர். மாப்பிள்ளையின் முகம் முழுவதுமாக மாறி இருந்தது. அவன் முகம் பரணையே பார்த்துக் கொண்டிருந்தது!

பூரண சந்திரனாய் வந்து கொண்டிருக்கும் சிட்டுவைப் பார்த்தபடியே திரும்பிய தென்னவன் பார்வையும் மாப்பிள்ளையைச் சந்தித்தது!

(தொடரும்)

அடுத்த இதழில்...



திணறடிக்கும் மருத்துவச் செலவுகள்!

—கவர்ஸ்டோரி

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

இந்திரா ரவி,
கோவில்பட்டி,
பூதலூர் — 613 602.

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.

? அவதூறு செய்திகளை வெளியிட்டதற்காகச் சில வார இதழ்களின் மீது தமிழக அரசு வழக்குத் தொடர்ந்துள்ளது பற்றி...?

! அவதூறுக்காக வழக்குத் தொடர்வதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. ஆனால் வழக்குத் தொடர்பாக (அல்லது தொடர்பின்றியே கூட) பத்திரிகை ஆசிரியர் போலீஸாரால் சித்திரவதைக்கு உள்ளாகிறார்; மிரட்டப்படுகிறார் என்று செய்திகள் வரும் போது கவலையாகத்தான் இருக்கிறது. 'சந்தேகத்தின் பேரில் கைது செய்ய அனுமதிக்கும் சட்டத்தை ரத்து செய்துவிட்டதாகப் பெருமைப்படும் கருணாநிதி ஆட்சியிலா இப்படி?' என்று வியப்புடன் வினா எழுப்பச் செய்கிறது அந்தச் செய்தி!

* கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'எம்.ஜி.ஆர். எனக்கு நாற்பது ஆண்டு கால நண்பர்' என்று கருணாநிதி கூறியுள்ளது பற்றி?

! அதை யார் எண்ணிப் பார்க்கிறார்கள்? பதின்மூன்று ஆண்டுகளாக நிலவி வந்த விரோதம்தானே 'பளிச்'சென்று எல்லோருக்கும் நினைவு வருகிறது!

# நாடாளுமன்றத் தேர்தல் முடிவு எப்படி இருக்கும்?

* அ. ராமச்சந்திரன், பெசண்ட்நகர்.

? பி.டி.ஐ., யு.என்.ஐ. ஊழியர்கள் தங்கள் ஊதிய கோரிக்கைகளுக்குப் பேனா முறிப்பு கிளர்ச்சியில் ஈடுபட்டது பற்றி...?

! எழுத்து தெய்வம்; எழுதுகோல் தெய்வம்! வேறு எத்தனையோ போராட்ட வழிகள் இருக்க, எமக்குச் சோறு போடும் பேனாவையா முறிப்பது? இறைவா, எங்களை மன்னியுங்கள்!

* கே. வேல்சாமி, மதுரை.

? இந்த நூற்றாண்டுக்குள் வரதட்சிணைக் கொடுமை ஒழியுமா?

! ''ஹ... ஹ்... ஹ... ஹ்... ஹா!'' — சிரிப்பது யார் தெரிகிறதா? மாயாஜாலம் போலப் பல்வேறுதோற்றங்களை எடுக்கவல்லவரதட்சிணை அசுரன்தான்!

* ம. செந்தில்நாதன், மதுரை.

? 'இந்திய ராணுவம் கற்பழிக்க இலங்கைக்கா செல்ல வேண்டும்? உங்கள் வீடுகளுக்கு வரலாமே?' என்று ஜெயகாந்தன் அமைதிப்படை ஆதரவுக் கூட்டத்தில் பேசினாராமே?

! வரம்பு மீறிய வாதங்கள் யாரை ஆதரிக்க எண்ணுகிறோமோ, அவர்களுக்கு எதிராகவே போய்விடக் கூடும்! இலங்கைப் பிரச்னையில் ஒன்றல்ல, இரண்டல்ல, ஏராளத் தவறுகள், எல்லாத் தரப்பிலும் நடந்திருக்கின்றன. எல்லோருமே ஆன்மப் பரிசோதனையில் ஈடுபட வேண்டிய அவசியம் இருக்கிறது. வரம்பு மீறிய வார்த்தைகள் நிலைமை சீர்ப்பட உதவப் போவதில்லை.

* புலிச்சோழன், கோவை — 45.

? 'டெலிவிஷனில் உங்கள் விழாக்களையும், கூத்துக்களையும் முதல் அலைவரிசையில் நடத்திக் கொள்ளுங்கள். இரண்டாவது அலைவரிசையை மாநில அரசுகளிடம் ஒப்படையுங்கள்' என்கிறாரே கலைஞர்?

! ஆமாமாம்; மாநில அரசுகளுக்கும் தங்கள் விழாக்களையும் கூத்துக்களையும் நடத்த அரங்கம் தேவையல்லவா! நிற்க, தனி கார்ப்பரேஷனிடம் ஒப்படைப்பதாகத் தேசிய முன்னணி சார்பில் வி. பி. சிங் அளித்த வாக்குறுதியின் கதி என்ன ஆவது?

* பி. எஸ். வாசன், ஈரோடு.

? வருகிற நாடாளுமன்றத் தேர்தல் முடிவு எப்படி இருக்கும்?

! நிச்சயம் சந்தோஷப்படும்படி இராது. காரணம், தேசிய முன்னணி வெற்றி பெற்றால் குடுமிப்பிடி சண்டை; காங்கிரஸ் வெற்றி பெற்றால் மக்கள் தலை மொட்டை!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? மகாத்மா காந்தி காலத்திய காங்கிரஸுக்கும் ராஜீவ் காந்தி காலத்திய காங்கிரஸுக்கும் நீங்கள் காணும் வேறுபாடு என்ன?



* வரம்பு மீறி...



* இரண்டாவது அலைவரிசை!



* வாக்குறுதியின் கதி?





! முன்னது. மக்களின் நம்பிக்கையைப் பெற்று அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அறங்காவலர்களால் நிர்வகிக்கப்பட்டு வந்த அறக்கட்டளை. பின்னது, சோல்புரோப் ரைட்டர்ஷிப் நிறுவனம்.

*** இந்திரா ரவி, பூதலூர். ***

**? அன்று தி. மு. க. செய்த போது வன்முறையாகத் தெரியாதது, இப்போது எதிர்க் கட்சியினர் செய்யும் போது வன்முறையாக ஆட்சியில் இருப்போருக்குத் தோன்றுவது ஏன்?**

! 'மந்திரிகளுக்குக் கறுப்புக் கொடி காட்டப்படும்போது தி. மு. க. வினர் உணர்ச்சி வசப்படலாம்; அதனால் மோதல் நிகழ்ந்து வன்முறையில் முடியலாம்; எனவேதான் முன்னெச்சரிக்கையாகப் பல அ. தி. மு. க. வினரைக் கைது செய்துள்ளோம்' என்று கூறுகிறது ஆட்சி. அமைதி காப்பது என்ற நோக்கம் சரியானதுதான். ஆனால் அதற்கு, உணர்ச்சி வசப்பட்டு மோதக் கூடிய தி. மு. க. தொண்டர்களையல்லவோ முன்னெச்சரிக்கையாகக் கைது செய்து காவலில் வைக்க வேண்டும்? ஏனெனில், கறுப்புக் கொடி காட்டுவது என்பது எதிர்ப்பைத் தெரிவிக்க ஜனநாயகத்தில் ஒப்புக்கொள்ளப் பட்ட ஒரு வழிமுறையாயிற்றே! அதற்குத் தடை விதித்தால் எதிர்ப்பை நசுக்குவது போலாகுமே!

*** கே. மகேஷ், சங்கராபுரம்.**

**? 'மத்திய, மாநில அரசுகளுக்கிடையே மோதல் கூடாது' என்கிறாரே சிதம்பரம்?**

! 'மோதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்' என்பதே மத்திய அரசின் மந்திரமாக இருக்கும் போது, சிதம்பரம் பேசிப் பயனென்ன!

*** அ. சிவா, கிருஷ்ணாபுரம்.**

**? ஒரு எம்.எல்.ஏ. டெலிவிஷன் பெட்டியை உடைப்பது தவறாகாதா?**

! அதிலொன்றும் தவறு இல்லை. டி. வி. நிலையத்தின் போக்கைக் கண்டிக்க அவர் கையாளும் ஒரு வழி அது. அவரோ அல்லது அவர் கட்சியோ காசு கொடுத்து வாங்கிய டி. வி. பெட்டியை அவர் உடைப்பதை யார் தடுக்க முடியும்? அமெரிக்காவில் தேசக் கொடியைக் கொளுத்துவது கூடக் குற்றமல்ல என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பு வழங்கி விட்டது! அதைத் தடுக்க விசேஷச் சட்டம் இயற்ற யோசித்து வருகிறார் ஜனாதிபதி புஷ்!

*** க. ராம்குமார், கும்பகோணம்.**

**? சிக்கனம் எது? கஞ்சத்தனம் எது?**

! தமிழக வறட்சி நிவாரணப் பணிக்கு மத்திய அரசின் உதவியாகக் கேட்கப்பட்ட ரூ. 222 கோடியில் ரூ. 138 கோடியாவது தந்திருந்தால் சிக்கனம்; ரூ. 38 கோடி தந்தது கஞ்சத்தனம்.

# டீ.வி. கடியை விட்டா கொசுக்கடி பெரிது?




### கொசுக்கடியும் டீ. வி. கடியும்!

○○ பக்கத்து வீட்டு மாமா, எப்பொழுதும் ''டீ.வி. புரோகிராம், படுபோர், செம்மை கடி, அறுவை'' என்று அலுத்துக் கொள்வார். என்னுடைய பத்து வயது மகளும் அவ்வப்பொழுது இதனைக் கேட்டுக் கொண்டிருந்தாள். கடந்த ஞாயிறன்று, வீட்டிலுள்ள அனைவரும் டீ.வி. பார்த்துக் கொண்டிருந்த போது, என் மாமனார் என்னிடம் ''கொசு கடிக்கிறது. கொசு வர்த்தி ஏற்றி வை'' என்றார். உடனே எனது மகள், ''டீ.வி. கடியையே பொறுத்துக் கொள்ளும் போது, கொசுக்கடிக்காக, கொசுவர்த்தியை ஏற்றி, வீண் செலவு செய்ய வேண்டாம் அப்பா'' என்று சிக்கனத்திற்கான அறிவுரை கூற, கூடியிருந்த அனைவரும் 'கொல்'லென்று சிரித்து விட்டனர்.

— சாந்தா யோகாநந்தம்,
சென்னை — 88.

### வளருது தேசபக்தி!

○○ ஒருவர்: என் பையனுக்கு டீ.வி.யில் ஒளிபரப்பாகும் தேசபக்திப் பாடல்களைக் கேட்டுக் கேட்டு இப்போ ரொம்ப தேசபக்தி வளர்ந்திடுச்சி.

மற்றவர்: அப்படியா? என்ன தொண்டு செய்யறான்?

பதில்: டீ.வி.யில் தேசபக்திப் பாடல்கள் ஆரம்பித்தவுடன் ''நேரு சமாதான ஓட்டம்' ஓடுகிறான்!

— வி. வி. ராஜன், பரமக்குடி.

### அந்த ஒரு தகுதி...

○○ பாவம் என் தம்பி! எவ்வளவோ முயற்சி செய்தும், தகுதிகள் நிறைய இருந்தும், ஐந்து வருஷங்களாக மிகக் குறைந்த சம்பளத்தில், சிறிய வேலையில் இருக்கிறான். குடும்பப் பொறுப்பு இல்லாமல், நல்ல வேலைக்கு முயற்சி செய்யாமல் இருப்பதாக, என் அம்மா எப்போதும் அவனைத் திட்டிக் கொண்டேயிருப்பாள். சென்ற சனிக்கிழமையும், அம்மா இதே போல் அவனை மொலுமொலுவென்று பிடித்துக் கொண்ட போது, சூழ்நிலையை மாற்ற டீ.வி.யை ஆன் செய்தேன். ''அப்பொழுது மத்திய உள்துறை அமைச்சர் ப. சிதம்பரம் பேசிக் கொண்டிருந்தார். அரசு நிறுவனங்களில் பல்லாயிரக்கணக்கான வேலை வாய்ப்புகள் இருப்பதாகவும், அவற்றை வரும் ஆகஸ்டுக்குள் நிரப்ப வேண்டுமென பிரதமர் ராஜீவ் காந்தி உத்தரவிட்டிருப்பதாகவும், உடனே விண்ணப்பிக்குமாறும் அவர் அறிவித்ததைக் கேட்டவுடன் எங்கள் எல்லோர் முகத்திலும் ஆயிரம் வாட்ஸ் பல்பு பிரகாசம்! ஆனால் நொடிப் பொழுதில் பல்பு ஃப்யூஸாகிப் போயிற்று! அவையெல்லாம் பிற்பட்ட வகுப்பினருக்கு விடுத்த அன்பு வேண்டுகோளாம்...! என்ன செய்வது என் தம்பிக்கு அந்த ஒரு தகுதி மட்டும் இல்லையே!

— ஆர். ராஜாராம், சென்னை — 28.

### இப்படியும் நடப்பதுண்டு

○○ டீ.வி., ரேடியோ போன்ற சாதனங்களினால் வேடிக்கையும், மகிழ்ச்சியும் உண்டாவது போல் துயரச் சம்பவங்களும் சில சமயம் உண்டாகி விடும். ஒருநாள் டீ.வி.யில் படம் தெளிவில்லாததால் என் கணவர் ஆண்டெனாவைத் திருப்புவதற்காக ஆண்டெனா பைப்பில் கை வைக்கவும் அதில் எப்படியோ மின்சாரம் பாய்ந்திருக்க, என் கணவரை அப்படியே பிடித்துக் கொண்டது. என் கணவரின் ''அம்மா'' என்ற அலறல் கேட்டு உடனே, மெயினையும், டீவி சுவிட்சுகளையும் அணைத்தவுடன் என் கணவர் அப்படியே கீழே விழுந்து விட்டார். இன்னும் சிறிது நேரம் தாமதித்திருந்தாலும் நடந்திருக்கக்கூடிய பயங்கரத்தை இன்று நினைத்தாலும் கலக்கமாக உள்ளது.

— ஜி. ராதா கோபு, சென்னை — 57

### தாத்தாவின் சுறுசுறுப்பு!

○○ எனது நண்பனின் தாத்தா, பாட்டிக்குச் சதாபிஷேகம் நடைபெற்றது. அந்த 'கேசட்'டை வீடியோவில் போட்டுப் பார்த்துக் கொண்டிருந்தோம். வயதானபடியால், ரொம்ப முடியாமல் அந்த தாத்தா மிக



மெதுவாய் சதாபிஷேகத்தில் இயங்கிக் கொண்டிருந்தார். அதைப் பார்த்த பாட்டி, "எப்பவும் உங்களுக்குச் சோம்பல்தான். சுறுசுறுப்பே பத்தாது" என தாத்தாவை அடிக்கடி கிண்டல் செய்து கொண்டிருந் தார். சில நிமிடம் கழித்து, பாட்டி எதையோ எடுக்க உள்ளே சென்றார். அப்போது தாத்தா 'கேசட்'டை 'ஃபாஸ்ட் ஃபார்வேட்' செய்ய, அதன் விளைவாய்த் தாத்தா 'கிடுகிடு'வெனக் குனிவதும், நிமிர் வதும், நடப்பதும்... ஒரே வேடிக்கை! அந்த நேரத்தில் உள்ளே சென்றிருந்த பாட்டி திரும்பி வந்தார். "பாருடி! அங்க பாரு. என்னையா சோம்பேறிங்கறே? எவ்வளவு வேகமாய் நடக்கறேன், எவ்வளவு வேக மாய் அட்சதை தூவுகிறேன் பார்..." என்று தாத்தா கூற, நாங்கள் விழுந்து, விழுந்து சிரிக்க, ஒரே ரகளைதான்.

— எஸ். ராஜா, குத்தாலம்.

### டீ. வி. யால் ஓர் ஒப்பந்தம்!

○○ நன்றாகப் படித்துக் கொண்டிருந்த எனது இரு பிள்ளைகளுக்கும் டீ.வி. வாங் கிய பின் படிப்பில் கவனம் குறைந்தது. முழு ஆண்டுத் தேர்வு நெருங்கியது. என்ன செய்வது? நண்பரான ஒரு டீ.வி. மெக் கானிக்கை விட்டு டீ.வி.யை ரிப்பேராக்கி னேன். பிறகு அவரைக் கொண்டே, "இதற் குத் தேவையான ஸ்பேர் பார்ட்ஸ் கம்பெனி யில் இருந்து நேரிடையாக வரவழைத்துத் தான் சரி செய்ய வேண்டும்" என்று கூறச் செய்தேன். முதலிரண்டு நாட்களுக்கு மன வருத்தமாக இருந்தாலும் பிறகு பிள்ளை கள் படிப்பில் கவனம் செலுத்தினர். தேர்வு முடிந்தது. செட்டும் சரி செய்யப்பட்டது. ரிசல்ட் நல்ல முறையில் அமைந்தது. பிறகு பிள்ளைகளுக்கு உண்மை புரிந்து விட்டது.



இப்போது படிப்பு நேரமென்றும், டீ.வி. நேரமென்றும் ஓர் ஒப்பந்தம் எங்களுக்குள் ஏற்பட்டு நிலைமை சரிசெய்யப்பட்டுள்ளது.

— அம்சா. ஜீ. வெங்கடேசன், பூந்தோட்டம்.

### அம்மா, அம்மா சொல்லித் தராதே!

○○ சித்தார்த்த பாசுவின் 'க்விஸ் ப்ரோக் ராம்' நிகழ்ச்சியின் போது, கேட்கப்பட்ட வினாக்களுக்கு எங்கள் இருவரில் யார் அதிகமாகச் சரியான விடை கூறுகிறோம் என்று எனக்கும் என் கணவருக்கும் இடையே போட்டி! இருவரும் மாறி மாறிச் சரியான விடைகளைக் கூறிக் கொண்டே யிருந்தோம். என் ஏழு வயது மகள் கிருத்திகா "அம்மா, அம்மா, நீ சொல்லிக் கொடுத்து விடுகிறாய். அதைக் கேட்டு அந்த அண்ணாவெல்லாம் கரெக்டாகச் சொல்லி விடுகிறார்கள். இனிமே நீ சொல்லாதே!" என்று அழுதவுடன் எங்களுக்கு அடக்க முடியாத சிரிப்பு!

— லலிதா கௌரிசங்கர், கடலூர்.

### கோபவாகினியான ரூபவாஹினி

○○ 'நல்லா இருந்தா நடு வூட்டுலே வைப்பாளாம், புடிக்காமப் போனா போடி தெருவுக்கும்பாளாம்'கிற கதையா இருக்கு, சிலோன் டீ.வி. — ரூபவாஹினியின் கதை!

'தொட்டுக்கோ கட்டிக்கோ'ன்னு இலங் கைக்கும் இந்தியாவுக்கும் சுமுகமான உறவு நிலவி, இலங்கைத் தமிழர் பிரச்னையும் கொஞ்சம் 'அமுங்கின' மாதிரி இருந்தா, ரூபவாஹினியில் தமிழ் நிகழ்ச்சிகள் பொங் கிப் பிரவாகமெடுத்துப் பெருகி வந்து நம்மைத் திக்குமுக்காடச் செய்து விடும்!

ஏதாவது ஒரு 'கருத்துச் சிக்கல்' ஏற் பட்டுட்டா போதும், உடனே, தமிழ் நிகழ்ச்சியெல்லாம் நத்தை ஓட்டுக்குள்ளே ஒளியிற மாதிரி 'சொல்லாம கொள்ளாம' காணாமப் போயிடும்!

'அமைதிப்படையைக் கூப்புட்டுக்கோ'ன்னு இப்ப ஒரே ரகளையாக் கிடக்கு பாருங்க..? தமிழ் நிகழ்ச்சியெல்லாம் போன இடம் தெரியலைங்க...! 'பொன் மாலைப் பொழுது' வர்ற நேரத்துலே பிரேமதாசா பேசறாருங்க! 'காதம்பரி' வர்ற நேரத்திலே இலங்கை ஜனாதிபதி கதைக்கிறாருங்க...! 'உதய கீதம்' வர்ற நேரத்திலே முன்னாள் பிரதமர் (அதே 'தாசா'தான்!) உரையாற்று றாருங்க! 'சங்கமம்' வர்ற நேரத்துலே திரும்பவும் அவரே வந்து 'ஸ்பீச்' குறாருங்க! (நம்ம ராஜீவ் எவ்வளவோ பரவாயில் லைன்னு ஆயிடறார் போங்க!)

'எந்த ஊருக்கோ, எதுவோ சர்க்கரை'ங் கிற கதையா, நாங்க சிலோனைத் தாங்க விரும்பிப் பார்ப்போம். ரூபவாஹினியும் இப்படி அடிக்கடி 'கோப'வாஹினி யா யிட்டா, நாங்க எதைத் தாங்க பார்த்துத் தொலைக்கிறது?

— லதா ராஜ்கோகுல், மன்னார்குடி.

# சினிமா தெய்வங்களின் தரிசனம்!



நாலைந்து டூரிஸ்ட் பஸ்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து நிற்கும். அவற்றிலிருந்து ஆந்திர சகோதர சகோதரிகள் குழந்தை குட்டிகளுடன் 'திமுதிமு' என்று இறங்கி, பெருங்கூச்சல் எழுப்பிக் கொண்டு பெரிய பங்களாவின் மூடியிருக்கும் ராட்சஸ கேட்டுக்கு முன் போய் நிற்பார்கள். சிலர் காம்பவுண்டு சுவர் உயரத்துக்கு 'எம்பி எம்பி'க் குதிப்பார்கள். சிலர் 'கேட்' இடுக்கு வழியாகத் தங்கள் இதய தெய்வத்தின் முக தரிசனத்தைக் காணத் துடிப்பார்கள்.

இவர்களெல்லாம், திருப்பதியில் ஸ்ரீ வேங்கடாசலபதியைத் தரிசித்துக் கொண்டு, பிரார்த்தனை செலுத்திய தலையோடு நேரே மாம்பலத்துக்குப் பறந்து வருபவர்கள்! குலதெய்வத்தைப் பார்த்த கண்களோடு, சினிமாத் தெய்வங்களைக் கண்டால்தான் அவர்களுக்குத் தூக்கம் வரும்!

ஆந்திர டூரிஸ்ட் பஸ் ஓட்டுநர்கள், இவர்களைத் தெரு முனையில் இறக்கி விட்டு விட்டு, அக்கம்பக்கத்திலுள்ள நட்சத்திரங்களை உஷத்கால தரிசனம் செய்து கொண்டு வரும்படி துரத்தி விடுவார்கள். 'இந்த வீடு, அந்த வீடு' என்று கையைக் காட்டிவிட்டு, அவர்கள் டீயும் பீடியும் குடிக்கச் சென்று விடுவார்கள். அது யார் வீடு என்று கூடத் தெரியாமல் அந்த அப்பாவிக் கூட்டம், கேட்டுக்கு வெளியே தவமிருப்பதைக் கண்டு, சிரிப்பதா, பரிதாபப்படுவதா என்று எனக்குப் புரியாது. சில சமயம் பால்கனியில் ஓர் உருவம் காட்சியளிக்கும். கடவுளே பிரத்யட்சமாகி விட்டது போல் பக்தர் கூட்டம் ஆனந்தப் பரவசக் கூச்சல் எழுப்பி, ஆரவாரம் செய்யும். அந்தக் 'கடவுள்' கையசைத்தாலோ, கையெடுத்துக் கும்பிட்டு விட்டாலோ, அவ்வளவுதான், கன்னத்தில் போட்டுக் கொள்ளாத குறையாக உணர்ச்சி வசப்பட்டுக் குதிப்பார்கள். சில பங்களாக்களில் வாட்ச்மேன் அதில் வசிக்கும் நடிகர் பெயரைச் சொல்லி, 'அவர் ஊரில் இல்லை' என்று விரட்டி விடுவார். வாழ்க்கையே கசந்து போய், பெரும் ஏமாற்றத்துடன் பஸ்ஸுக்குத் திரும்பி விடுவார்கள். அந்தச் சுற்றுலாவே தோல்வியுற்றது போன்று முகம் வாடிவிடும், பாவம்.

நான் இருக்கும் தெருவைச் சுற்றி நாலைந்து சினிமா நட்சத்திரங்கள் வசிப்பது எனக்குத் தெரியக் காரணமாயிருந்தவர்கள் இந்த ஆந்திர பக்தர்கள் தான்! என்னிடம் இவர்கள் சினிமா நட்சத்திரங்களின் முகவரியை விசாரிப்பார்கள். ஓரிரு முறை 'தெரியாது' என்று சொல்லிவிட்டு என் நடையைத் தொடர்ந்திருக்கிறேன். பின்னர் ஏதோ பெரிய அபசாரம் செய்து விட்டது போல் நான் உணர்ந்தேன். இதய தெய்வங்களைத் தேடிக் கொண்டு, இத்தனை ஆர்வத்துடன் நம் பேட்டைக்கு வந்துள்ள நம் சகோதரர்களுக்கு இந்த உதவி கூடச் செய்யாமல் இருப்பது மகா பாவம் என்று தோன்றியதால், அந்த வட்டாரத்தில் உள்ள சினிமா நட்சத்திரங்களின் பங்களாக்கள் இருக்கும் இடங்களை விஷயம் அறிந்த வட்டாரத்திலிருந்து கேட்டுத் தெரிந்து வைத்துக் கொண்டேன்!

இப்போதெல்லாம், 'மோகன் பாபு காரு இல்லு எக்கட உந்தி' 'கிருஷ்ணராஜ் இல்லு எதி?' ராதிகா அம்மகாரு எக்கட உன்னாரு?' 'சுதாகரு இல்லு மீக்கு தெல்ஸா?' என்று யார் கேட்டாலும் சற்றும் தயங்காமல் 'டக், டக்' என்று போஸ்ட்மேன் மாதிரி வழி காட்டுகிறேன்.

ஒரு நாள் பிற்பகலில் வள்ளுவர் கோட்டம் பக்கமாக ஒரு நண்பரைச் சந்திக்கப் போயிருந்த போது ஆந்திர பக்தர்களுக்குத் தமிழ்நாடு பக்தர்கள் அப்படி ஒன்றும் குறைந்து போய் விடவில்லை என்பதும் தெரிய வந்தது. டூரிஸ்ட் பஸ்ஸை விட்டு இறங்கியதும் வள்ளுவர் கோட்டத்தை மறந்து விட்டு, பாக்யராஜ் வீடு நோக்கித் திபுதிபுவென்று அத்தனை பேரும் ஓடியது கண்கொள்ளாக் காட்சி!

சினிமாவில் பார்த்த முகங்களை, நேரில் பார்க்க வேண்டும் என்று மக்கள் துடியாய்த் துடிப்பதற்கான காரணத்தை மனோதத்துவப் பேராசிரியர்களிடம் கேட்டறிய வேண்டும் என்று ரொம்ப நாட்களாக ஓர் ஆசை. அதிலும், 'சினிமா நடிகர்களைத் தெய்வ புருஷர்களாகப் போற்றி ஜன்ம சாபல்யம் அடைய நினைக்கும் கிராம மக்களின் தணியாத ஆர்வப் பெருக்கு, மனோதத்துவத்தில் பி.எச்டி. ஆராய்ச்சிக்குரிய சப்ஜெக்டாக நான் கருதுகிறேன்.

**— மெரீனா**

## வேண்டுகோள்

உடையார்பாளையம் சமஸ்தானம் ஆதீன பரம்பரை பாத்யதையைச் சேர்ந்த ஸ்ரீ பயறணீஸ்வர ஸ்வாமி ஆலயம், ஸ்ரீ காஞ்சி பரமாச்சார்யாள் அருள் ஆசியின் படி ஸ்ரீ காஞ்சி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளால் 26.10.88 — இல் திருப்பணி துவக்கி வைக்கப்பட்டு ஸ்ரீ ஜெயேந்திரர் பொன்விழாக் கமிட்டியினரால் திருப்பணி ஆரம்பிக்கப்பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற இருப்பதால் ஆஸ்திக அன்பர்கள், திருப்பணி பூர்த்தியாகிக் கும்பாபிஷேகம் சிறப்புற நடைபெறும் பொருட்டு தங்களால் இயன்ற பொருள் உதவியை அடியில் கண்ட முகவரிக்கு அளித்துத் திருவருள் குரு அருள் பெற வேண்டுகிறேன்.

இங்ஙனம்
ஸ்ரீமத் K. C. பெரிய குழந்தை ராஜா,
ஜமீன்தார் & ஆதீன பரம்பரை டிரஸ்டி.
ஸ்ரீ பயறணீஸ்வரர் ஸ்வாமி ஆலயம்.
உடையார்பாளையம், திருச்சி மாவட்டம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:

திரு. C. R. குஞ்சிதபாதம் (அட்வகேட்),
33, மகாதான தெரு, மயிலாடுதுறை — 6009 001.

திரு S. குருமூர்த்தி,
16, புகழேந்தி சாலை, பிளாக் நெ. 2, நெய்வேலி — 607 801.

# சொன்னது சொன்னபடி...



○○ சில வல்லரசு நாடுகளின் தூதர்கள், 'அக்னி' ஏவுகணை செலுத்தப்பட்டால் இந்தியா மீது கடும் நடவடிக்கை எடுக்கப் படும் என்று எச்சரித்தார்கள். நான் அவர்களிடம் தெளிவாகச் சொன்னேன்: 'நாங்கள் ஏவுகணையைச் செலுத்தத்தான் போகிறோம். எந்த அச்சுறுத்தலுக்கும் பயந்து எங்கள் முடிவை மாற்றிக் கொள்ள மாட்டோம்!'

— பிரதமர் ராஜீவ்.

○○ எல். கே. அத்வானி மத்திய செய்தி—ஒலிபரப்புத் துறை அமைச்சராக இருந்த போது, வர்கீஸ் கமிட்டி தயாரித்த வானொலி — தொலைக் காட்சிகளின் சுயாட்சி அறிக்கையை வாங்கிக் கிடப்பில் போட்டு விட்டார். உண்மையில் வானொலியும் தொலைக்காட்சியும் இப்படி ஏகபோகமாகச் செயல்படக் காரணகர்த்தாவே இந்த அத்வானிதான். இப்போதைய எதிர்க் கட்சிகள் எதுவும் ஆட்சிக்கு வந்தால்கூட, இந்த இரு அமைப்புக்களுக்கும் சுயாட்சி அதிகாரம் வழங்க மாட்டார்கள்!

—மினு மசானி.

○○ இயற்கை வளங்களின் தயவு தமிழ் நாட்டுக்குக் குறைச்சல்தான். அதனால் அணுமின் நிலையங்களை விட்டால் தமிழ் நாட்டுக்கு வேறு வழியே கிடையாது. மத்திய அரசு தமிழ்நாட்டில் 2000 மெகவாட் அணுமின் நிலையம் நிறுவ இருப்பது மகிழ்ச்சி அளிக்கிறது.

— குடியரசுத் தலைவர் ஆர். வெங்கட் ராமன்.



○○ ஐந்தாவது சம்பள கமிஷன் பரிந்துரையின்படி 262 கோடி ரூபாய்தான் செலவாகும். ஆனால் முதலமைச்சர் அவர்கள் ஊழியர்களின் நலனையும், திருப்தியையும் மனத்தில் கொண்டு கருணையுடன், கூடுதலாகவே அதிகச் செலவினங்களுக்கு ஒப்புக் கொண்டு விட்டார்.

— ஆர்க்காடு வீராசாமி.

○○ ஜூன் 8—ஆம் தேதி, மத்திய அரசு ஊழியர்களுக்கு இணையாக, முதல்வர் சம்பள உயர்வு அறிவித்த போது ஏற்பட்ட எதிர்பார்ப்புகள், இப்போது ஏமாற்றத்தை அளித்து விட்டன. குறிப்பாகப் பத்து முதல் பதினைந்து வருடங்களாகப் பணியாற்றும் கிட்டத்தட்ட தொண்ணூறு சதவிகித ஊழியர்களைப் பொறுத்தவரை, சம்பளத்தில் அதிகபட்ச உயர்வு ஐம்பது ரூபாய்தான்!

— தமிழ்நாடு அரசு ஊழியர் சங்கத் தலைவர் கே. கங்காதரன், பொதுச் செயலாளர் எம். ஆர். அப்பன்.

○○ பிரெஞ்சு ஓபன் டென்னிஸில் பதினேழு வயது மைக்கேல் சாங் வெற்றி பெற்றது, இப்படி சின்னப் பையன்கள் எங்களைப் போன்ற அனுபவசாலிகளைத் தோற்கடிக்கிறார்களே என்ற மன வருத்தத்தை உண்டாக்கியது. சாங் மட்டும் விம்பிள்டன் இறுதியை எட்டியிருந்தால், நான் நடு மைதானத்தில் என் நிஜாரைக் கழற்றிப் போட்டு விட்டுப் போயிருப்பேன்.

— மெக்கன்ரோ.

○○ நல்லவேளை, மெக்கன்ரோவுக்கு அந்த நிலை உண்டாகாமல் காப்பாற்றி விட்டேன். ரசிகர்களும் அந்தக் காட்சியைப் பார்க்காமல் தப்பித்தார்கள்.

— சாங்கைத் தோற்கடித்த டிம்.

தொகுப்பு: சித்தார்த்

# ஊர்வலம் வரலாம்; உஷார்! உஷார்!!

* மாணவர் சிறப்பிதழ் மூலம், என் பழைய மாணவ அனுபவம் — சந்தோஷம் இவைகளை நினைத்து ரசித்தேன். சிறப்பிதழை வெகு சிறப்பாகக் கொடுத்த கல்கிக்கு என் மனமார்ந்த பாராட்டுக்கள்.

மதுரை — 9. பிரபாகர் பிரியன்.

* 'கல்வி: மாநகரில் பெறுவதா? சிறுநகரில் சிறப்பதா?' என்ற மாணவ — மாணவியரின் உரையாடல் மிக நன்றாக இருந்தது.

சென்னை — 23. அயன்புரம் செவாஜிபாபு.

* கடந்த ஓராண்டில் கல்கியில் பிரசுரமான சிறுகதைகளில், "தொடுவான உறவுகள்," "கைக்குட்டைக் கனவுகள்," "காதலென்பது," "என்ன இருந்தாலும்" ஆகிய ஒவ்வொரு கதையையும் படித்தபோது "யாரந்தத் தமயந்தி?" எனக் கேட்கத் தோன்றியது. மாணவர்சிறப் பிதழில் மாணவ எழுத்தாளர் தமயந்தியை அறிமுகப் படுத்தியமைக்கு நன்றி.

கோவை. கா. மணிகண்டன்.

* காதலைப் புதுக்கோணத்தில் பார்த்த — பார்க்கவைத்த தமயந்திக்கு எனது பாராட்டுக்கள்.

கும்பகோணம்.
கே.ஆர். பவானி.

* மாணவ மற்றும் வாசகர்களின் அனுபவங்கள், கமெண்ட்கள் அனைத்தும், விதவிதமான ஸ்வீட் வகையறாக்களைச் சாப்பிட்ட திருப்தியை அளித்தன.

திருச்சி. எஸ். இந்திர பூபதி.

* நம்பிக்கை, தன்னம்பிக்கை, விடாமுயற்சி, நகைச்சுவை, கற்பனை, இசை, காதல் இன்னும் பல விதக்கலவையான உணர்ச்சிகளில் மூழ்கி, இளமையோடும் புத்துணர்ச்சியோடும் திகழச் செய்தது மாணவர் சிறப்பிதழ்! அட்டை வண்ணப்படத்தை எடுத்த புகைப்படக் கலைஞருக்கு எனது வாழ்த்துக்கள்.

புதுக்கோட்டை. எஸ். நூர்.

* சுயக் கட்டுப்பாடு இல்லாததால் மனிதன் எப்படிச் சீரழிகிறான் என்பதை 'நரகத்திலிருந்து மேலும் கொடிய நரகத்துக்கு' உண்மைக் கதையின் மூலம் தெளிவாக உணர்த்திவிட்டார்கள்.

திருச்சி — 1. சுஜாதா சம்பத்.

* மாணவர்சிறப்பிதழில்வெளியான உண்மைக்கதைகள் இரண்டும் அவசரப்பட்டு முடிவெடுப்பவர்களையும், போதைப் பொருள்களுக்கு அடிமையானவர்களையும் நிச்சயம் திருந்தச் செய்யும் தூண்டுகோல் கதைகள்.

நெய்வேலி — 3. ப. உத்தண்ட ராமன்.

* எதற்கும் தயாராய் இருங்கள், உங்கள் காரியாலயத்தில் எப்போது வேண்டுமானாலும் மாணவ சமுதாயம் நுழையலாம்; மாணவர் சிறப்பிதழ் தந்த நல்ல செயலுக்காக உங்களை அலாக்காகத் தூக்கிக் கொண்டு ஊர்வலம் வரலாம்; உஷார் உஷார்! உஷார் செய்வது என் கடமை!

கடலூர் — 2. ஆர். வேலுமணி.

* 'கவுதமியின் பேட்டி சூப்பர். "திறமையிருந்தாலும் நடிப்பில் ஆர்வம்காட்டாமல்முதலில்படிப்பில் ஆர்வம் காட்டுங்கள்" என்ற அவரின் அறிவுரை இன்று ஒவ்வொரு மாணவ — மாணவியரும் நினைவில் கொள்ள வேண்டிய பொன்மொழி.

மொரப்பூர். மு. திருநாவுக்கரசு.

* மாணவர் சிறப்பிதழிலும் சினிமா நடிகையின் பேட்டியை நுழைத்து விட்ட சாமர்த்தியம் பலே! 'எப்படியும் எம்.பி.ஏ முடித்தே தீருவேன்' என்ற கவுதமியின் சுவையான பேட்டியைத்தான் குறிப்பிடுகிறேன்.

சென்னை — 23. த. சத்திய நாராயணன்.

* இவ்வாரக் கல்கியில் எவ்விதக் கட்டுரையும் இல்லை என்றாலும், கட்டுரை இல்லை என்பதே தெரியாமல் சினாவில் நடக்கும் மாணவர்எழுச்சியைப் பற்றி இங்கே இருமாணவர்களைப் பேட்டி கண்டிருப்பது பாராட்டுக்குரியது.

தக்கோலம். அ. முஸ்தபா.

* 'விடுதலைப்புலிகள் தங்களது தனி ஈழ நாடு கோரிக்கையைக் கைவிட வேண்டும்' என்று கல்கியில் தலையங்கம் வெளிவந்திருக்கிற நேரத்தில், விடுதலைப் புலிகளும், தங்களது கோரிக்கையைக் கைவிட்டிருப்பது ஒரு நல்ல ஆரம்பம்என்றேதோன்றுகிறது. இதைத் தக்க முறையில் பயன்படுத்தி, இலங்கை அமைதியுற, இந்திய — இலங்கைத் தலைவர்கள் முயல வேண்டும் என்ற கல்கியின் எண்ணம் ஈடேறட்டும்.

இராணிப்பேட்டை.
பேப்பர்கார்த்திக்.

* தலையங்கம் கண்டேன். இலங்கைப் பிரச்னை இன்னும் ஒரு தீராத தலை வலியாகவே உள்ளது. இருஅரசாங்கமும் இதை ஒரு நாட்டுப் பிரச்னையாகக் கருதாமல் கௌரவப் பிரச்னையாகக் கருதுகின்றன என்பதுதான் கொடுமை. அது சரி, இவ்வளவு நாளாக எலியும் பூனையுமாக இருந்த 'இலங்கை அரசும் விடுதலைப் புலிகளும் எப்படி திடீர் என்று ராசியானார்கள்? இருவருமே ஏதோவோர் உள்நோக்குடன் தான் இதைச் செய்கிறார்கள். இவர்கள் கரி பூச நினைப்பது இந்திய அரசாங்கத்தின் முகத்தில் மட்டுமல்ல, இலங்கைத் தமிழர்களின் முகத்திலும் தான்.

திருச்சி — 2. கி. ரமேஷ்.

* "தோல்வி நிலையென நினைத்தால் மனுஷன் வாழ்வை நினைக்கலாமா" இந்த பாடல் வரிகள் எனக்கு மிகமிகப் பிடித்த வரிகள். இந்தத் தலைப்பில் உள்ள உண்மைச் சம்பவத்தைப் படித்த போது, "படிக்கறதும் பாஸாகிறதும் முக்கியம்தான் மகனே...! ஆனால் அது மட்டுமே வாழ்க்கை இல்லை. உன் சிசல்டை விட நீ எங்களுக்குமுக்கியம்கலா" என்ற வாக்கியங்களை ஒரு தாயாகிய நான் கண்ணீருடன் தான் படிக்க முடிந்தது!

நெசப்பாக்கம். கு. மாலதி குசேலன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 53/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka




**ஜண்டு பாம்**

# ஜலதோஷம், தலைவலி மற்றும் நோவுகளை நொடியில் நீக்குகிறது.

வேலைகளுக்கு இடைஞ்சலும் ஏற்படாது. தலைவலியில் இருந்து துரிதமான விடுதலையும் கிடைக்கிறது. எனவேதான் தேவை ஜண்டு பாம். தலைவலி நீங்கலாக, ஜலதோஷம், இடுப்புவலி, மூட்டுவலி, தசைப் பிடிப்பு மற்றும் சுளுக்கு வலிகளில் இருந்தும் குணம் அளிக்கிறது. தவிரவும், மற்ற பாம்களோடு ஒப்பிடும்போது ஜண்டு பாம் கூடுதல் வீரியம் கொண்டது. நிறமற்றது. எனவே கறை படியுமோ என்ற பயமில்லை. பிசுபிசுப்பற்றது. அதனால் வீட்டிலோ வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. ஜண்டு பாமை கொஞ்சமாக உபயோகித்தால் போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத்துக்கும் இதமானது. ஆகவேதான் தாய்மார்கள் தங்கள் குடும்பத்தினருக்கு ஜண்டு பாமையே தடவ விரும்புகிறார்கள்.

சீசாவின் மேல் இருக்கும் சிவப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்.




5, 10 மற்றும் 30 கிராம்களில் கிடைக்கிறது

**ஜண்டு பாம்** வலிகளை நீக்கும் பாம்

ULKA-Z-1-88 TAM